॥ ஸ்ரீஹரி: ॥

645▲

# நள - தமயந்தி

(கதைப் பகுதி)

नल-दमयन्ती ( तमिल )




ஸ்ரீஜயதயால்ஜீ கோயந்தகா

॥ ஸ்ரீஹரி: ॥ 645

# நள–தமயந்தி

## (கதைப் பகுதி)

नल-दमयन्ती (तमिल)

---

த்வமேவ மாதா ச பிதா த்வமேவ
த்வமேவ ப$_3$ந்து$_4$ஶ்ச ஸக$_2$ா த்வமேவ ।
த்வமேவ வித்$_3$யா த்$_3$ரவிணம் த்வமேவ
த்வமேவ ஸர்வம் மம தே$_3$வதே$_3$வ ॥

ஆருயிர் அன்னையும் நீயே, அருமைத் தந்தையும் நீயே,
உறவும் சுற்றமும் நீயே, உற்ற நண்பனும் நீயே,
கற்கும் கல்வியும் நீயே, சேர்க்கும் செல்வமும் நீயே,
அனைத்தும் ஆன என்றன் ஆதிதேவனும் நீயே!

---

தமிழாக்கம்
திரு. K.P. மணியன்,

ஆக்கியோர்
ஸ்ரீ ஜயதயால் கோயந்தகா

645 Nal Damyanti Section 1 Front

*Books are also available at—*

1. Gita Press Sales Depot
   Gita Press Mansion, 8/1M, Racecourse
   COIMBATORE — 641018
   ✆ 0422-3202521
2. Gita Press Gorakhpur Book Shop
   Electro House N0. 23
   Ramanathan Street, Kilpouk
   CHENNAI — 600010
   ✆ (044) 26615959; Fax 26615909
3. 12, Abhirami Mall, Purasavalkam, Near Kilpouk/Veperi, CHENNAI

Thirteenth Reprint 2016 3,000

Total 51,000

❖ **Price : ₹ 8**

**( Eight Rupees only )**

Printed & Published by :

**Gita Press, Gorakhpur—273005 (INDIA)**

(a unit of Gobind Bhavan-Karyalaya, Kolkata)

Phone - (0551) 2334721, 2331250 ; Fax - (0551) 2336997

web : **gitapress.org** e-mail : **booksales@gitapress.org**

**Visit gitapressbookshop.in for online purchase of Gitapress publications.**

645 Nal Damyanti_Section_1_Back

|| ஸ்ரீஹரி: ||

# நூல் அறிமுகம்

பகவான் வேதவியாசரைப் பற்றிக் கீழ்கண்ட சுலோகம் சொல்லப்பட்டிருக்கிறது—

***அசதுர்வத$_3$நோ ப்$_3$ரஹ்மா த்$_3$விப$_3$ாஹுரபரோ ஹரி: ।***
***அப$_4$ாலலோசந: ஶம்பு$_4$: ப$_4$கவாந் ப$_3$ாத$_3$ராயண: ॥***

'நான்கு முகங்கள் இல்லாத பிரும்மா; இரண்டு கைகளுடைய மற்றொரு விஷ்ணு; நெற்றிக்கண் இல்லாத சிவபெருமான். அதாவது, அவர் பிரும்மா–விஷ்ணு–மகேசுவர வடிவானவர். இவரே வேதவியாசர்' என்று பொருள். உலகில் நன்மை பயக்கக்கூடிய, ஆபூர்வமான விஷயங்கள் எத்தனை உள்ளனவோ, அவையனைத்தும் வேதவியாசரால் உமிழப்பட்டவையே – ***'வ்யாஸோச்சிஷ்ட்டம் ஜகத்ஸர்வம்'***. இத்தகைய வேதவியாச பகவான் ஜீவாத்மாக்கள் நற்கதி அடையும் பொருட்டு மகாபாரதத்தை இயற்றினார். அந்த மகாபாரதத்தினுடைய சுருக்கத்தை ஜீவன்முக்தரும், தத்துவம் உணர்ந்தவரும், இறையடியாரும், மகாபுருஷருமாகிய சேட்ஜீ ***ஸ்ரீஜயதயால் கோயந்தகா*** (நிறுவனர் – கீதா பிரஸ்) அவர்கள் ஹிந்தி மொழியில் தந்திருக்கிறார். இவ்விதம் வேதவியாசரின் மூலச்சுவடியில் இருந்தும், சேட்ஜீயால் சுருக்கி எழுதப்பட்டுள்ள மகாபாரதத்திலிருந்தும், அனைவருக்கும் பயன்படக்கூடிய சில கதைகளைத் தேர்ந்தெடுத்துத் தொகுத்துத் தந்திருக்கிறார்கள், கீதா பிரஸ் பதிப்பகத்தார். இக்கதைகளில் சிறப்பான சக்தி இருப்பதால், இவைகளைப் படிப்பதன் மூலம் உயர்ந்த பலன் கிடைக்கிறது. அக்கதைகளிலிருந்து ***'நள–தமயந்தி'*** என்ற கதை, வாசகர்களின் பார்வைக்கு வைக்கப்பட்டுள்ளது. வாசகர்கள் இந்நூலைத் தாங்கள் படிப்பதுடன், பிறரையும் படிக்கச் செய்ய வேண்டும் எனப் பணிவுடன் கேட்டுக் கொள்கிறேன்.

பணிவுள்ள,

**சுவாமி ராம்ஸுகதாஸ்**



॥ ஸ்ரீஹரி: ॥

# பொருளடக்கம்





|| ஸ்ரீஹரி: ||

# நள–தமயந்தி

## (கதைப் பகுதி)

கர்கோடகஸ்ய நாகஃஸ்ய த₃மயந்த்யா நளஸ்ய ச ।
ருதுபர்ணஸ்ய ராஜர்ஷே: கீர்தநம் கலிநாஶநம் ॥

''கார்கோடகன் என்ற நாகம், அரசி தமயந்தி, அரசன் நளன், ராஜரிஷி ருதுபர்ணன் – இவர்களின் சரித்திரத்தைப் பகர்வோருக்குக் கலியினால் ஏற்படும் பாவங்கள் நசிந்துவிடும்.''

மகாத்மாவான அர்ஜுனன் அஸ்திரங்களைப் பெற்று வருவதற்காக இந்திரலோகம் சென்றிருந்தபோது, பாண்டவர்கள் காம்யகவனத்தில் வசித்து வந்தனர். அரசை இழந்ததாலும், அர்ஜுனனது பிரிவினாலும் மிகுந்த துயருற்றிருந்தனர். ஒரு நாள் பாண்டவர்களும் திரௌபதியும், இது பற்றி உரையாடிக் கொண்டிருந்தார்கள். தர்மபுத்திரரான யுதிஷ்டிரர், பீமசேனனுக்கு அறிவுரை கூறிக் கொண்டிருந்த் சமயம், மகரிஷி பிருஹதச்வர் ஆசிரமத்திற்கு வந்து சேர்ந்தார்.

மகரிஷி பிருஹதச்வர் வந்து கொண்டிருப்பதைக் கண்ட தர்மநந்தனர், முன்னால் விரைந்து சென்று, அறநெறிப்படி அவருக்கு மரியாதை செய்து, வரவேற்று ஆசனத்தில் அமரச் செய்தார். அவர் சற்று ஓய்வு எடுத்துக் கொண்ட பின், அவரிடம் யுதிஷ்டிரர் தனது வரலாற்றைக் கூறத் தொடங்கினார்— ''மாமுனிவரே! கௌரவர்கள் கபட புத்தியுடன் என்னைச் சூதாட்டத்திற்கு அழைத்தனர். சூது அறியாத என்னைத் தோற்கடித்து, எனது உடைமைகள் அனைத்தையும் கவர்ந்து கொண்டனர். அத்துடன் உயிராக நான் நேசிக்கும் திரௌபதியை இழுத்து வந்து, அமைச்சர்கள்

நிறைந்த சபையில் அவமானப்படுத்தினர். கடைசியில் மான்தோலை அணிவித்து, கொடிய கானகத்திற்கு அனுப்பிவிட்டார்கள். மாமுனிவரே! இப்பூவுலகில் என்னைப் போன்ற அதிருஷ்டமில்லாத அரசர், வேறு யாராவது இருக்கிறார்களா? என்று நீங்களே கூறுங்கள். என்னைப் போன்று துன்பப்பட்டவர் யாரைப் பற்றியாவது நீங்கள் கேட்டதுண்டா? யாரையாவது பார்த்ததுதான் உண்டா?''

முனிவர் பிருஹதச்வர் கூறினார்— ''தர்மராஜனே! உன்னைப் போல் துன்பப்பட்ட அரசன், வேறு யாரும் இருந்ததில்லை என்று நீ கூறுவது சரியல்ல. ஏனெனில், உன்னைவிட அதிகமாகத் துயரமடைந்தவனும் துரதிருஷ்டம் உள்ளவனுமான அரசனது சரிதத்தை நான் அறிவேன். நீ விரும்பினால் சொல்கிறேன்.''

தர்மராஜன் வற்புறுத்திக் கேட்கவே, முனிவர் பிருஹதச்வர் நள—தமயந்தியின் சரிதத்தைக் கூறத் தொடங்கினார்.

## தமயந்தியின் சுயம்வரமும், திருமணமும்

தர்மநந்தனா! நிஷத நாட்டில் வீரசேனனின் மகனான 'நளன்' என்றொரு அரசர் இருந்து வந்தார். அவர் உயர்ந்த குணங்கள் படைத்தவர்; மிக அழகானவர்; உண்மையே பேசுபவர்; புலனடக்கம் உள்ளவர்; எல்லோருக்கும் பிரியமானவர்; வேதமறிந்தவர்; அந்தணர்களிடம் பக்தி உள்ளவர். மிகப்பெரிய படை வலிமை கொண்டவர். அவர் அஸ்திர வித்தையில் கைதேர்ந்தவர்; மாவீரர்; போர்க்களத்தில் வெற்றியே காண்பவர்; பெருந்தன்மை உடையவர்; ஆற்றல் மிக்கவர். அவருக்கு சூதாட்டம் ஆடுவதிலும் சிறிது விருப்பம் இருந்தது.

அந்தச் சமயத்தில் விதர்ப்ப தேசத்தை 'பீமன்' என்ற மன்னர் ஆண்டு வந்தார். அவரும் நளனுக்கு நிகரான குணநலன்கள் அனைத்தும் பெற்றவராகவும், பேராற்றல்



திசைமுகந்த வெண்கவிதைத் தேர்வேந்தே! உன்றன்
இசைமுகந்த தோளுக்கு இசைவாள் – வசையில்
தமையந்தி என்றோதும் தையலாள் மென்றோள்
அமையந்தி என்றோர் அணங்கு.

(நளவெண்பா, சுயம்வர காண்டம் 36)

படைத்தவராகவும் இருந்தார். அவர் 'தமன' முனிவரை மகிழ்வித்து, அவர் அருளிய வரத்தின் பயனாக தமன், தாந்தன், தமனன் என்ற மூன்று புதல்வர்களையும், தமயந்தி என்ற ஒரு புதல்வியையும் அடைந்தார். தமயந்தி, லட்சுமிதேவியை நிகர்த்த அழகு படைத்தவள். தேவர்களிலோ, யட்சர்களிலோ கூட அவள் போன்ற அழகான பெண்கள் காணப்படவில்லை. அப்போது விதர்ப்ப தேசத்திலிருந்து நிஷத நாட்டிற்கு வந்து, நளனிடம் தமயந்தியின் அழகைப் பற்றியும், குணங்களைப் பற்றியும் பலர் விவரித்துக் கூறினார்கள். அவ்வாறே நிஷத நாட்டிலிருந்து விதர்ப்ப நாட்டிற்குச் செல்கிறவர்களும், தமயந்தியின் முன்னிலையில் நளனுடைய குணம், அழகு, ஒழுக்கம் — இவற்றைப் பற்றி வர்ணித்தார்கள். ஆகவே, இருவர் உள்ளத்திலும் காதல் மலர்ந்தது.

ஒரு நாள் நளன், தன் அரண்மனை தோட்டத்தில் சில அன்னப்பறவைகளைக் கண்டார். அவற்றில் ஒன்றைப் பிடித்தார். அந்த அன்னப்பறவை— ''நீங்கள் என்னை விட்டுவிடுவீர்களானால், நான் தமயந்தியிடம் சென்று, உங்களையே மணம் செய்துகொள்ளும் அளவிற்கு உங்களது குணநலன்களை விளக்குவேன்'' என்று கூறியது. நளனும் அந்தப் பறவையை விட்டுவிட்டார்.

பறவைகள், விதர்ப்ப தேசத்திற்குப் பறந்து சென்றன. தன் அருகில் வந்த அன்னப்பறவைகளைக் கண்டு மகிழ்ந்த தமயந்தி, அவற்றைத் துரத்திப் பிடிக்க ஓடினாள். தமயந்தி துரத்தி ஓடிய அன்னப்பறவை கூறியது— ''தமயந்தி! நிஷத தேசத்தில் நளன் என்ற அரசர் இருக்கிறார். அவர் அசுவினிகுமாரர்களைப் போன்ற அழகுடையவர். ஆண்களில் அவருக்கு நிகரான அழகுடையவர் ஒருவருமில்லை. அவர் அழகில் மன்மதன். நீ, அவரைக் கணவராக அடைந்தால், உன் பிறவியும் அழகும் பயன் பெறும். நாங்கள் தேவர்கள், கந்தர்வர்கள், மனிதர்கள், நாகர்கள், அரக்கர்கள் —



செம்மனத்தான் தண்ணளியான்
செங்கோலான் மங்கையர்கள்
தம்மனத்தை வாங்கும் தடந்தோளான் – மெய்ம்மை
நளனென்பான் மேனிலத்தும் நானிலத்தும் மிக்கான்
உளனென்பான் வேந்தன் உனக்கு.

(நளவெண்பா, சுயம்வர காண்டம் 53)

இவர்களைக் கண்டிருக்கிறோம். ஆனால், நளனுக்கு நிகரான அழகுடைய ஆண்மகன் எங்குமே கண்ணில்படவில்லை. நீ, எப்படிப் பெண்களில் இரத்தினமோ, அவ்வாறே நளன் ஆண்களுக்கு அணிகலன். உங்கள் இருவரின் ஜோடிப் பொருத்தம் மிகவும் சிறந்ததாக இருக்கும்.'' இதைக் கேட்ட தமயந்தி அன்னத்திடம், ''அன்னமே! நீ, நளனிடம் சென்று இவ்வாறே சொல்ல வேண்டும்!'' என்றாள். அன்னம், நிஷத நாட்டிற்குத் திரும்பிச் சென்று, நளனிடம் தமயந்தியின் செய்தியைக் கூறியது.

அன்னப்பறவை மூலம் நளனின் புகழைக் கேட்ட தமயந்தி, அவரிடம் காதல் கொண்டாள். இரவும்–பகலும் அவர் நினைவாகவே இருந்தாள். தமயந்தியின் மேனி பசலை படர்ந்து, நிறம் மாறி வலிமை குன்றினாள்; பொலிவிழந்து காட்சி அளித்தாள். தமயந்தியின் தோழிகள் அவளுடைய உள்ளுணர்வை அறிந்து கொண்டு, விதர்ப்ப ராஜனிடம் பணிவுடன், ''தங்கள் மகளின் உடல்நலம் பாதிக்கப்பட்டு இருக்கிறது'' என்று கூறினார்கள். அரசன் பீமன், தன் மகளைப் பற்றி ஆழ்ந்து சிந்தித்தார். இறுதியில், 'என் மகள் திருமண வயதை அடைந்துவிட்டாள். ஆகவே, அவளது சுயம்வரத்திற்கான ஏற்பாட்டைச் செய்ய வேண்டும்' என்று தீர்மானித்தார். எல்லா அரசர்களுக்கும் சுயம்வரத்திற்கான அழைப்பு அனுப்பினார். அதில், அனைவரும் தமயந்தியின் சுயம்வரத்திற்கு வந்து, தாங்களும் பயனடைந்து, தன் விருப்பத்தையும் நிறைவேற்ற வேண்டுமென்று அறிவித்து இருந்தார். எல்லா தேசத்து மன்னர்களும் தங்களை அலங்கரித்துக் கொண்டு, யானை, குதிரை, தேர் – இவற்றின் ஒலியால் பூமியை எதிரொலிக்கச் செய்துகொண்டு, விதர்ப்ப தேசத்திற்கு வரத் தொடங்கினர். பீமனும் அவர்களை வரவேற்று, உபசரிக்கத் தகுந்த ஏற்பாடுகள் செய்திருந்தார்.

தேவரிஷி நாரதர், பர்வதர் வாயிலாக தேவர்களுக்கும் தமயந்தியின் சுயம்வரச் செய்தி எட்டியது. இந்திரன் முதலான

எல்லா திக்பாலகர்களும் தங்கள் குழுவுடனும் வாகனங்களுடனும் விதர்ப்ப தேசத்தை நோக்கிப் புறப்பட்டனர். நள மகாராஜன் நளனுக்கோ, முதலிலேயே தமயந்தியிடத்தில் ஆழ்ந்த காதல் ஏற்பட்டிருந்தது. அவரும் தமயந்தியின் சுயம்வரத்தில் பங்கு கொள்ள விதர்ப்ப தேசத்திற்குப் பயணமானார்.

தேவர்கள், தேவலோகத்திலிருந்து கீழே இறங்கும் சமயம் மன்மதன் போன்ற அழகு வாய்ந்த நளன், தமயந்தியின் சுயம்வரத்திற்குச் சென்று கொண்டிருப்பதைப் பார்த்தார்கள். சூரியனை நிகர்த்த நளனுடைய பொலிவையும், உலகிற்குப் புறம்பாக மேம்பட்ட அவருடைய அதிசய அழகையும் கண்டு, தேவர்கள்கூட வியந்து நின்றனர். நளனை அடையாளம் கண்டு கொண்ட தேவர்கள், தமது விமானங்களை வானிலேயே நிறுத்திவிட்டு, கீழே இறங்கி வந்து நளனிடம், ''நள மகாராஜனே! தாங்கள் உண்மை பேசுவதையே நோன்பாகக் கொண்டவர். எங்களுக்கு உதவும் பொருட்டு தூது செல்ல வேண்டும்'' என்று கேட்டனர். நளன், அவர்களுக்கு உதவி செய்வதாக உறுதிமொழி தந்தார். பிறகு, அவர்களிடம் ''நீங்கள் அனைவரும் யார்? என்னைத் தூதுவராக்கி, எந்தப் பணியை நிறைவேற்றச் சொல்கிறீர்கள்?'' என்று கேட்டார்.

இந்திரன்— ''நாங்கள் தேவர்கள். நான் இந்திரன்; இவர்கள் அக்னியும் வருணனும் யமனும் ஆவர். நாங்கள் தமயந்தியின் நிமித்தம் இங்கு வந்துள்ளோம். நீங்கள் எங்கள் தூதுவராகி, தமயந்தியிடம் சென்று, 'இந்திரன், வருணன், அக்னி, யமன் ஆகிய தேவர்கள், உன்னைத் திருமணம் செய்து கொள்ள விரும்புகிறார்கள். இவர்களில் யாரிடம் உனக்கு விருப்பம் உள்ளதோ, அவரை உன் மணாளனாகத் தேர்ந்தெடு' என்று கூறுங்கள்.''

கைகளைக் குவித்துக் கொண்டு நளன் கூறினார்— ''தேவராஜனே! அங்கு நீங்கள் போனாலும் நான் போனாலும்

ஒரே விளைவுதான். ஆகையால், என்னை உங்கள் தூதுவராக்கி, அங்கே அனுப்புவது சரியானதல்ல. எவன், ஒரு பெண்ணைத் தன் மனைவியாக்கிக் கொள்ள ஆசை கொண்ட பிறகு, அவன், அவளை எவ்வாறு கைவிட முடியும்? அவளிடம் சென்று, நான் இந்த விஷயத்தை எப்படிக் கூறுவேன்? இவ்விஷயத்தில் தயை செய்து நீங்கள் என்னை மன்னித்தருளுங்கள்.''

தேவர்கள் கூறினர்— ''நளனே! நீ, எங்களிடம் 'எங்கள் காரியத்தைச் செய்து தருவேன்' என்று முதலிலேயே வாக்குறுதி அளித்திருக்கிறாய். அந்த வாக்குறுதியை மீறாதே. தாமதமின்றி அங்கே செல்.''

நளன் வினவினார்— ''அரண்மனையில் எப்பொழுதும் கடுமையான காவல் இருந்து கொண்டிருக்கும். நான் உள்ளே எவ்வாறு புக முடியும்?''

இந்திரன்— ''நீ, அங்கே போ. உன்னால் உள்ளே செல்ல முடியும்'' என்றார்.

நளன், இந்திரனின் ஆணையைச் சிரமேற்கொண்டு, அரண்மனைக்குள் எவ்விதத் தடையுமின்றிப் புகுந்து தமயந்தியைக் கண்டார். தமயந்தியும், அவளுடைய தோழிகளும்கூட அவரைக் கண்டதும் பேச்சிழந்து போயினர். ஈடு இணையற்ற அழகு படைத்த ஆண்மகனைக் கண்டு மயங்கி வெட்கமடைந்து, ஒன்றும் பேச முடியாமல் சிலையாக நின்றார்கள்.

தமயந்தி ஒருவாறு தன்னிலைக்கு வந்து நளனிடம் கேட்டாள்— ''வீரரே! பார்ப்பதற்கு மிக அழகாகவும் குற்றமற்றவராகவும் தோன்றுகிறீர். முதலில் நீர் யார்? என்பதைத் தெரிவிப்பீர். எந்த நோக்கத்தோடு இங்கே வந்திருக்கிறீர்? நீர் வரும்போது காவலர்கள் உம்மைப் பார்க்கவில்லையா? அவர்கள் சிறிது தவறு செய்தாலும், என் தந்தை கடுமையான தண்டனை கொடுப்பாரே?''

இதைக் கேட்ட நளன் கூறலானார்— "கல்யாணி! நான் நளன். திக்பாலகர்களுக்குத் தூதனாக, உன்னிடம் வந்துள்ளேன். அழகியே! இந்திரன், அக்னி, வருணன், யமன் இந்த நால்வரும் உன்னை மணம் செய்து கொள்ள விரும்புகிறார்கள். இவர்களில் ஒருவரை உன் கணவனாகத் தேர்ந்தெடுத்துக் கொள். இந்தச் செய்தியை உன்னிடம் தெரிவிக்கவே, இங்கு வந்தேன். இந்த தேவர்களின் மகிமையால்தான் நான் அரண்மனைக்குள் நுழையும்போது, ஒருவராலும் என்னைப் பார்க்க முடியவில்லை. தேவர்களின் விருப்பத்தைத் தெரிவித்துவிட்டேன். இனி, உன் விருப்பப்படி நடந்து கொள்" என்றார்.

மிகுந்த பக்தி–சிரத்தையுடன் அந்த தேவர்களை மனத்திற்குள் வணங்கிவிட்டுப் புன்சிரிப்புடன் தமயந்தி நளனிடம் கூறினாள்— "அரசே! நீங்கள் என்னை அன்புடன் பாருங்கள். உங்களுக்கு எப்படி பணிபுரிய வேண்டும் என்று எனக்குக் கட்டளையிடுங்கள். என் சுவாமி! நான் என்னைப் பரிபூரணமாக, உங்களுக்கு அர்ப்பணித்து விட்டேன். எனது அனைத்தையும் உங்கள் சரணங்களில் ஒப்படைத்துவிட்டேன். நீங்கள், என் மீது நம்பிக்கை கொண்டு அன்பு செலுத்துங்கள். அன்னப்பறவையின் வார்த்தையை என்றைய தினம் கேட்டேனோ, அன்றிலிருந்து உங்களுக்காக நான் ஏங்கிக் கொண்டிருக்கிறேன். உங்கள் பொருட்டுத்தான் அரசர்களை ஒன்றுகூட்டி சுயம்வரத்திற்கான ஏற்பாட்டைச் செய்யச் சொன்னேன். அபலையான என் வேண்டுகோளை நீங்கள் நிராகரித்தால், நான் விஷம் அருந்தியோ, தீயில் கருகியோ, நீரில் மூழ்கியோ, தூக்கிட்டுக் கொண்டோ, உங்களுக்காக உயிரைத் துறப்பேன்."

மன்னர் நளன் கூறினார்— "மிக உயர்ந்த நிலையில் இருக்கும் திக்பாலகர்களான தேவர்கள், உன்னைத் திருமணம் செய்து கொள்ள ஆசைப்படும்போது, சாதாரண மனிதனான என்னை ஏன் விரும்புகிறாய்? அந்த அதிருஷ்டசாலிகளான

தேவர்களின் கால்தூசிக்குக் கூட, நான் நிகராக மாட்டேன். அவர்களிடம் உன் மனத்தைச் செலுத்து. தேவர்களுக்கு விருப்பமில்லாததைச் செய்தால் மரணம் ஏற்படும். நீ, என்னைக் காப்பாற்று. அவர்களில் ஒருவரை மணாளனாகத் தேர்ந்தெடு.'' நளனுடைய இந்த வார்த்தையைக் கேட்ட தமயந்தி பயந்தே போனாள். அவள் விழிகளில் கண்ணீர் பெருக்கெடுத்தது.

தமயந்தி— ''எல்லா தேவர்களையும் வணங்கிவிட்டுத் தங்களையே என் பதியாகத் தேர்ந்தெடுக்கிறேன். இதை சத்தியமாகச் சபதம் செய்து கூறுகிறேன்'' என்றாள். அத்தருணத்தில் தமயந்தியின் உடல் நடுங்கிற்று. கைகளைக் குவித்துக் கொண்டாள்.

மன்னர் நளன் கூறினார்— ''நல்லது! நீ அப்படியே செய். ஆனால், நானோ தூதனாக, உன்னிடம் தேவர்களின் செய்தியைத் தெரிவிக்க வந்துள்ளேன். இந்த வாய்ப்பை என் சொந்த நலனுக்காகப் பயன்படுத்தினால், அது எவ்வளவு கீழ்த்தரமான செயலாகும்? அறத்திற்கு மாறுபடாமல் இருந்தால்தான் என் சொந்த நலனைத் தேடிக் கொள்ள முடியும். நீயும் அப்படித்தான் செய்ய வேண்டும்.''

தமயந்தி தழுதழுத்த குரலில் கூறினாள்— ''மனிதர்களில் சிறந்தவரே! குறைகள் இல்லாத ஓர் உபாயம் இருக்கிறது. அதன்படி செய்தால் உங்களுக்கு எந்தப் பழியும் ஏற்படாது. நீங்களும் திக்பாலகர்களுடன் கூட சுயம்வர மண்டபத்திற்கு வாருங்கள். அவர்கள் முன்னிலையிலேயே தங்களைக் கணவராகத் தேர்ந்தெடுப்பேன். அப்போது தங்களுக்கு எந்தப் பழியும் நேராது.''

பிறகு நளன் தேவர்களிடத்தில் வந்து அவர்களிடம் கூறினார்— ''உங்கள் கட்டளைப்படி நான் தமயந்தியின் அரண்மனைக்குள் சென்றேன். வெளியே வயதான வாயிற்காவலர்கள் காவல் காத்துக் கொண்டிருந்தார்கள்.

உங்களுடைய மகிமையினால், நான் உள்ளே நுழைவதை அவர்களால் பார்க்க முடியவில்லை. தமயந்தியும், அவள் தோழிகளும்தான் என்னைப் பார்த்தனர். அவர்கள், என்னைக் கண்டதும் ஆச்சரியமடைந்தார்கள். நான் தமயந்தியிடத்தில் உங்களைப் பற்றிக் கூறினேன். ஆனால், அவள் உங்களில் யாரையும் விரும்பாமல் என்னை மணந்து கொள்வதில் உறுதியாக இருக்கிறாள். 'எல்லா தேவர்களும் சுயம்வர மண்டபத்திற்கு வரட்டும். நான், அவர்கள் முன்னிலையிலேயே உங்களை மணந்து கொள்கிறேன். இதனால், உங்களுக்கு எந்தப் பழியும் நேராது' என்று கூறினாள். நான், உங்களிடம் எல்லாச் செய்திகளையும் கூறிவிட்டேன். நீங்கள்தான் எல்லா நிகழ்ச்சிகளுக்கும் இறுதியாக, சாட்சியாக விளங்குபவர்கள்.''

பீம ராஜா சுபமுகூர்த்தத்தில் சுயம்வர காலத்தைத் தேர்ந்தெடுத்து, அரசர்களை அழைத்தார். அரசர்கள் அனைவரும் தங்கள் இருப்பிடத்திலிருந்து வந்து, தத்தம் இருக்கைகளில் அமர்ந்தனர். சபை முழுவதும் அரசர்களால் நிரம்பிவிட்டது. அப்போது, தன் மேனியின் பொலிவினால் மன்னர்களின் மனத்தையும் கண்களையும் தன்பால் ஈர்த்துக் கொண்டு தமயந்தி அரங்கத்திற்கு வந்தாள். அரசர்கள் ஒவ்வொருவராக தமயந்திக்கு அறிமுகம் செய்விக்கப் பட்டார்கள். ஒவ்வொருவரையும் பார்த்துவிட்டு தமயந்தி முன்னால் நகர்ந்து சென்றாள்.

முன்னால் ஒரே இடத்தில் நளனைப் போன்ற வடிவமும், ஆடை அணிகலன்களும் கொண்ட ஐந்து அரசர்கள் ஒருங்கே அமர்ந்திருந்தனர். தமயந்திக்கு சந்தேகம் எழுந்தது. அவளால் நளச் சக்கரவர்த்தியை அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை. யாரைப் பார்த்தாலும், நளன் என்றே தோன்றிற்று. ஆகையால், 'நான், தேவர்களை எப்படி அடையாளம் கண்டு கொள்வேன்? நள மகாராஜாவை எப்படித் தெரிந்து கொள்வேன்?' என்று யோசிக்கத் தொடங்கினாள். அவளுக்கு மிகவும் வருத்தம் உண்டாயிற்று.



கண்ணிமைத்த லாலடிகள் காசினியில் தோய்தலால்
வண்ண மலர்மாலை வாடுதலால் – எண்ணி
நறுந்தா மரைவிரும்பும் நன்னுதலே அன்னாள்
அறிந்தாள் நளன்தன்னை ஆங்கு.

(நளவெண்பா, சுயம்வர காண்டம் 160)

கடைசியில், அந்த தேவர்களையே சரணமடைவதுதான் உகந்தது என்ற தீர்மானத்திற்கு வந்தாள். கைகூப்பி வணங்கி, தேவர்களைத் துதி செய்ய ஆரம்பித்தாள்— ''தேவர்களே! அன்னங்களின் வாயிலாக, நளனுடைய உயர்வைக் கேட்டு, அவரையே மணாளனாகத் தேர்ந்தெடுத்து உள்ளேன். மனத்தாலும் வாக்காலும் நளனைத் தவிர, வேறு யாரையும் நான் விரும்பவில்லை. 'நிஷத மன்னர் நளனே, என் மணாளர்' என்பது தெய்வ சங்கல்பம். நளனை வழிபடுவதற்காகத்தான் இந்த நோன்பை ஆரம்பித்து இருக்கிறேன். தேவர்களே! எனது உண்மையான சபதத்தின் பலத்தினால், 'யார் நளன்?' என்று காட்டிவிடுங்கள். ஐசுவரியமுள்ள திக்பாலகர்களே! தங்கள் வடிவத்தைப் புலப்படுத்துங்கள். அதன் மூலமாகப் பெருமதிப்புக்குரிய நளனை அடையாளம் கண்டு கொள்வேன்.''

தேவர்கள் இதைக் கேட்டனர். அவளுடைய உறுதியான தீர்மானம், உண்மையான அன்பு, ஆத்மசுத்தம், அறிவுக் கூர்மை, பக்தி, நளன்பால் அசையாத ஈடுபாடு – இவற்றைக் கண்ட தேவர்கள், இமையோர்களுக்கும் மனிதர்களுக்கும் உள்ள வேற்றுமையைக் கண்டு கொள்ளும் ஆற்றலை அவளுக்கு அளித்தனர்.

தமயந்தி கீழ்க்கண்ட வேறுபாடுகளைக் கண்டாள்— தேவர்கள் உடலில் வியர்வை இல்லை; இமைகள் கொட்டுவதில்லை. அவர்கள் கழுத்தில் உள்ள மலர்மாலைகள் வாடவில்லை; சரீரத்தில் அழுக்கு இல்லை. அவர்கள் அரியாசனத்தில் அமர்ந்துள்ளனர். ஆனால், அவர்கள் கால்கள் தரையைத் தொடவில்லை. அவர்கள் நிழல் கீழே விழவில்லை. அவள் நளனைப் பார்க்கும்பொழுது, அவரது நிழல் கீழே தரையில் விழுந்திருந்தது. கழுத்திலுள்ள மாலை சற்றே வாடியிருந்தது. அவரது மேனியில் சிறிது தூசியும் வியர்வையும் இருந்தன; கண்கள் இமைத்தன; கால்கள் தரையைத் தொட்டுக் கொண்டிருந்தன. இந்த அடையாளங்களைக் கண்ட தமயந்தி,

நளனைக் கண்டுகொண்டு தன் பதியாக வரித்தாள். சிறிது நாணத்தோடுகூட, தன் முகத்தை மறைத்திருந்த துணியை விலக்கி, நளன் கழுத்தில் மலர்மாலையை அணிவித்தாள். தேவர்களும் மகரிஷிகளும், 'வாழ்க! வாழ்க!!' என்று வாழ்த்தினார்கள். அரசர்களிடையே 'ஹா! ஹா!!' என்ற ஒலி கிளம்பியது.

மாமன்னர் நளன் மகிழ்ச்சிப் பெருக்கால் தமயந்தியைப் பாராட்டினார். அவர்— "கல்யாணி! தேவர்கள் எனக்கு முன் வரிசையில் இருந்தும்கூட அவர்களைத் தேர்ந்தெடுக்காமல், என்னைப் பதியாகத் தேர்ந்தெடுத்தாயே! ஆகையால், நீ என்னை அன்பார்ந்த கணவனாக எண்ண வேண்டும். நான், உன் சொல்லை மதிப்பேன். என் உடலில் உயிர் உள்ளவரை நான் உன்னிடத்தில் அன்புடன் இருப்பேன். இதைச் சத்தியமாகச் சொல்கிறேன்" என்று கூறினார்.

இருவரும் அன்போடு ஒருவரை மற்றொருவர் வாழ்த்தி தேவர்களைப் பணிந்தார்கள். தேவர்களும் மகிழ்ச்சி அடைந்தார்கள். அவர்கள் நளனுக்கு எட்டு வரங்கள் அருளினார்கள்.

இந்திரன், "யாகத்தில் உனக்கு என் தரிசனம் கிடைக்கும்; மேலான நிலையை எய்துவாய்." அக்னி, "நீ, என்னை நினைத்தால் அங்கேயே உனக்குத் தென்படுவேன். என் ஒளிக்குச் சமமான பிரகாசமான ஒளி பொருந்திய உலகம் உனக்குக் கிடைக்கும்." யமதர்மராஜன், "நீ தயார் செய்த உணவு மிகவும் சுவையாக இருக்கும். நீ அறத்தில் நிலைபெற்று நிற்பாய்." வருணன், "எந்த இடத்தில் நீ தண்ணீரை விரும்புகிறாயோ, அங்கே நீர் கிடைக்கும். உன் மாலை உயர்ந்த வாசனையுடன் சிறந்து விளங்கும்."

இவ்விதமாக இரண்டிரண்டு வரங்கள் அளித்துவிட்டு, தேவர்கள் அனைவரும் தங்கள் உலகத்திற்குச் சென்றனர். அழைக்கப்பட்ட அரசர்களும் விடைபெற்றுத் திரும்பினர்.



மன்னர் பீமன், மகிழ்ச்சியுடன் தமயந்தியை நளனுக்கு மணம் செய்து கொடுத்தார். சில நாட்கள் வரை நளன், விதர்ப்ப தேசத்தின் தலைநகரான குண்டினபுரத்தில் வசித்தார். பிறகு, பீம மகாராஜாவின் அனுமதியுடன் தன் மனைவி தமயந்தியோடு தன் தலைநகருக்குத் திரும்பினார். நள மாமன்னர், தன் தலைநகரில் அறநெறிப்படி ஆட்சி நடத்தி வந்தார். மன்னருக்குரிய இலக்கணங்கள் முழுமையாக இருந்ததால்; மன்னன் என்ற சொல், அவரிடம் பொருள் படைத்து

விளங்கியது. 'அசுவமேதம்' முதலிய பல வேள்விகளைச் செய்தார். உரிய காலத்தில் தமயந்திக்கு இந்திரசேனன் என்ற மகனும், இந்திரசேனை என்ற மகளும் பிறந்தார்கள்.



## கலிபுருஷனின் தீய எண்ணமும், சூதாட்டத்தில் நளன் தோற்று, நகரத்திலிருந்து வெளியேறுதலும்

மகரிஷி பிருஹதச்வர் கூறுகிறார்— யுதிஷ்டிரனே! தமயந்தியின் சுயம்வரம் முடிந்தபின், இந்திரன் முதலிய வானவர்கள் தத்தம் உலகங்களுக்குச் செல்லும் வழியில், அவர்களை கலிபுருஷனும் துவாபரனும் சந்தித்தனர்.

இந்திரன்— ''கலிபுருஷனே! நீ எங்கே சென்று கொண்டிருக்கிறாய்?'' என்று கேட்டார்.

கலிபுருஷன்— ''நான் தமயந்தியின் சுயம்வரத்திற்கு, அவளைத் திருமணம் செய்து கொள்ளும் எண்ணத்தோடு சென்று கொண்டிருக்கிறேன்.''

இந்திரன் சிரித்துக் கொண்டே கூறினார்— ''ஐயா! அந்தச் சுயம்வரம் எப்போதோ முடிந்துவிட்டது. தமயந்தி, நளனைத் தேர்ந்தெடுத்தும் விட்டாள். நாங்கள் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டு இருந்ததுதான் மிச்சம்.'' இதைக் கேட்டதும், மிகுந்த கோபத்துடன் கலிபுருஷன் சொன்னான்— ''ஓகோ! பெரிய அக்கிரமம் விளைந்து விட்டது. அவள் தேவர்களைக்கூடப் புறக்கணித்து, ஒரு மனிதனைத் தேர்ந்தெடுத்திருக்கிறாளே! அவளுக்குத் தண்டனை வழங்க வேண்டும்.''

தேவர்கள் கூறினார்கள்— ''எங்களுடைய அனுமதியைப் பெற்றுக்கொண்டுதான் தமயந்தி நளனைத் தேர்ந்தெடுத்தாள். உண்மையில் நளன், எல்லா குணநலன்களும் பெற்றவர்; அவளுக்கேற்ற மணாளன். அவர், எல்லா தர்மங்களின்

நுணுக்கங்களையும் அறிந்தவர்; நன்னடத்தை உள்ளவர். அவர் இதிகாச புராணங்களையும் வேதங்களையும் அறிந்தவர். அவர் அறநெறிப்படி வேள்விகளைச் செய்து, அமரர்களை மகிழ்விக்கிறார். ஒருபொழுதும் எவரையும் துன்புறுத்துவதில்லை; வாய்மையில் உறுதியுள்ளவர்; திடமான தீர்மானம் கொண்டவர். அவர் திறமை, உறுதி, அறிவு, தவம், தூய்மை, கட்டுப்பாடு – இவற்றில் லோகபாலகர்களுக்கு நிகரானவர். இவருக்குச் சாபம் கொடுப்பது என்பது நரகத்தில் எரிகின்ற தீயில் விழுவதற்குச் சமமாகும்.''

இவ்வாறு கூறிவிட்டு தேவர்கள் போய்விட்டார்கள். அதன் பிறகு கலிபுருஷன் துவாபரனிடம், ''சகோதரனே! என்னால் என் கோபத்தைத் தணித்துக் கொள்ள முடியவில்லை. நான், நளனுடைய சரீரத்தில் வசிக்கப் போகிறேன். அவன் ராஜ்யத்தை இழக்குமாறு செய்யப் போகிறேன். அப்போது அவனால் தமயந்தியுடன் சேர்ந்து வாழ முடியாது. ஆகையால், நீயும் சூதாட்டத்தின் பகடைக்காய்களுக்குள் நுழைந்து கொண்டு எனக்கு உதவி செய்'' என்று வேண்டினான். துவாபரயுக புருஷனும் இதற்கு ஒப்புக் கொண்டான்.

துவாபரனும் கலிபுருஷனும் நளனுடைய ராஜ்யத்தின் தலைநகரில் வசிக்கத் தொடங்கினார்கள். நளனிடத்தில் ஏதாவது ஒரு குறையைக் காண வேண்டும் என்று எதிர்பார்த்து, பன்னிரண்டு வருடங்கள் காத்திருந்தனர். ஒரு நாள், மன்னன் நளன் மாலை நேரத்தில் சிறுநீர் கழித்தபின் கால்களைக் கழுவிக் கொள்ளாமல் ஆசமனம் செய்து, சந்தியாவந்தனம் செய்ய உட்கார்ந்துவிட்டார். புனிதத்திற்குக் குறைபாடு உள்ள இச்செயலைக் கண்ட கலிபுருஷன், அவர் சரீரத்தில் புகுந்துவிட்டான். பிறகு, மற்றொரு வடிவத்தை எடுத்துக் கொண்டு நளனின் சகோதரன் புஷ்கரனிடம் சென்று— ''நீ நளனுடன் சூதாட்டம் ஆடு. என் உதவியினால் சூதாட்டத்தில் நளனை வென்று, ராஜ்யத்தைப் பெறுவாய்'' என்று கூறினான்.

புஷ்கரன், அவன் வார்த்தையை ஏற்றுக்கொண்டு நளனிடம் சென்றான். துவாபரனும் பகடைக்காய்களின் வடிவம் கொண்டு, அவன் உதவிக்குச் சென்றான். புஷ்கரன், சூதாட்டம் ஆட வரும்படி, திரும்பத் திரும்ப நளனை வற்புறுத்தினான். தமயந்தியின் முன்னால், தன் சகோதரன் புஷ்கரனது தொடர்ந்த அழைப்பை, நளனால் மறுக்க முடியவில்லை. உடனே சூதாட்டம் ஆடத் தொடங்கினார். அந்தச் சமயத்தில் நளனுடைய சரீரத்தில் கலிபுருஷன் நுழைந்து வசித்து வந்தான். அதனால் பந்தயத்தில் நளன் தங்கம், வெள்ளி, தேர், மற்ற வாகனம் எல்லாவற்றையும் இழந்து தோல்வியுற்றார். குடிமக்களும் மந்திரிகளும் மிகுந்த கவலை கொண்டு நளனைச் சந்தித்து, சூதாட்டம் ஆடுவதைத் தடுத்து நிறுத்த விரும்பினார்கள். வாயிலில் வந்து குழுமி நின்றனர்.

"அவர்கள் உட்கருத்தைப் புரிந்துகொண்ட வாயிற்காவலர்கள், ராணி தமயந்தியிடம் சென்று கூறினார்கள்— ''மகாராணி! மன்னரை வேண்டிக் கொள்ளுங்கள். நீங்கள் தர்மம், அர்த்தம் [பொருள்] – இவற்றின் உண்மையை அறிந்தவர். குடிமக்கள் எல்லோரும் உங்களுடைய துன்பத்தைப் பொறுக்க முடியாமல் வாயிலில் வந்து நின்று கொண்டிருக்கிறார்கள்.''

துக்கத்தினால் தமயந்தியும் மிகவும் பலவீனமாகவும் உணர்விழந்தும் இருந்தாள். கண்களில் நீர் நிறைந்தவளாக தழுதழுத்த குரலில் மன்னரிடம், ''சுவாமி! ராஜ விசுவாசமுள்ள குடிமக்களும் அமைச்சர் குழுவும், உங்களைச் சந்திக்க வந்திருக்கிறார்கள்; வாயிலில் நின்று கொண்டிருக்கிறார்கள்; அவர்களைச் சந்தியுங்கள்'' என்றாள். ஆனால், கலிபுருஷனின் ஆக்கிரமிப்பு காரணமாக, அவர் எதுவும் பேசவில்லை. அமைச்சர் குழுவும் குடிமக்களும் சோகத்தினால் பீடிக்கப்பட்டுத் திரும்பிச் சென்றார்கள்.

புஷ்கரனுக்கும் நளனுக்கும் இடையில் சூதாட்டம் பல மாதங்கள் நடந்து கொண்டே இருந்தது. நள மகாராஜாவும்



கற்பின் மகளிர்பா னின்றும் தமைக்கவட்டின்
விற்கு மகளிர்பான் மீண்டாற்போல் – நிற்கும்
நெறியானை மெய்ம்மைவாய் நின்றானை நீங்கிச்
சிறியானைச் சேர்ந்தாள் திரு.

(நளவெண்பா, கலிதொடர் காண்டம் 228)

ஒவ்வொரு முறையும் தோல்வியை அடைந்து கொண்டிருந்தார். சூதாட்டத்தில் எந்தப் பகடைக்காய்களை வீசினாலும், அவை அவருக்கு எதிராகவே இருந்தன. செல்வங்களனைத்தும் அவரிடமிருந்து அகன்றன. இந்த விஷயம் தமயந்திக்குத் தெரிந்ததும், பிருஹத்சேனை என்ற தாதி மூலமாக, நளனுடைய தேரோட்டியான வார்ஷ்ணேயனை அழைத்து அவனிடம் கூறினாள்— ''சாரதி! நீ, அரசரிடம் அன்பு கொண்டவன். இப்பொழுது மன்னர் பெரிய சங்கடத்தில் சிக்கிக் கொண்டுள்ளார் என்ற விஷயம் உனக்குத் தெரியும். ஆகவே நீ, குதிரைகளைத் தேரில் பூட்டி, என் இரு குழந்தைகளையும் தேரில் ஏற்றிக்கொண்டு குண்டினபுரம் போ. நீ, தேரையும் குதிரைகளையும் அங்கேயே விட்டுவிட வேண்டும். நீ விரும்பினால் அங்கேயே தங்கலாம்; இல்லையெனில் வேறு இடத்திற்குப் போய்விடலாம்.'' தமயந்தி கூறியபடி தேரோட்டி, அமைச்சர்களுடன் கலந்தாலோசித்து குழந்தைகளைக் குண்டினபுரத்தில் சேர்ப்பித்தான். தேரையும் குதிரைகளையும் அங்கேயே விட்டுவிட்டான். தான் கால்நடையாக அயோத்திக்குச் சென்று, ருதுபர்ண மன்னரிடம் தேர் ஓட்டும் வேலையை மேற்கொண்டான்.

தேரோட்டி வார்ஷ்ணேயன் சென்ற பிறகு சூதாட்டத்தில் புஷ்கரன், நளனுடைய அரசையும் செல்வத்தையும் கவர்ந்து கொண்டான். அவன், நளனைப் பார்த்து நகைத்துக் கொண்டே, ''இன்னும் சூதாட்டம் ஆடலாமா? ஆனால், பந்தயம் வைப்பதற்கு உன்னிடம் ஒன்றும் இல்லையே! தமயந்தியைப் பணயம் வைப்பது சரியானது என்று தோன்றினால் இன்னும் ஆடலாம்'' என்றான். இதைக் கேட்ட நளனுடைய இதயம் வெடித்துவிடும் போல் ஆனது. அவர் புஷ்கரனிடம் எதுவும் பேசவில்லை. தன் உடலின் மீதிருந்த எல்லா ஆடை—அணிகலன்களையும் கழற்றிவிட்டு, ஒரே ஓர் ஆடையை உடுத்திக் கொண்டு நகரத்திலிருந்து வெளியே புறப்பட்டார். தமயந்தியும் உடுத்திய புடவையுடன், தன் பதியைப் பின்தொடர்ந்தாள். நளனுடைய நண்பர்களுக்கும்

உறவினர்களுக்கும் பெருந்துயரம் உண்டாயிற்று. நளனும் தமயந்தியும் நகரத்திற்கு வெளியே மூன்று இரவுகள் தங்கினர். யாராவது நளனிடத்தில் இரக்கம் காட்டினால், அவர்களுக்குத் தூக்குதண்டனை கிடைக்கும் என்று புஷ்கரன் முரசு அறைவித்தான். அதனால், நகர மக்கள் அச்சம் கொண்டு, நளனுக்கு எவ்வித உதவியும் செய்ய முடியாமல் போயிற்று.

நகரத்திற்கு அருகில் மூன்று இரவுகள் நீரை மட்டும் அருந்திக் காலங்கழித்தார்கள். நான்காவது நாள் அவர்களுக்கு மிகவும் பசி ஏற்பட்டது. பிறகு இருவரும் கனி–கிழங்குகளை உட்கொண்டு மேலே நடந்து சென்றார்கள்.

ஒரு நாள் சில பறவைகள், தன் அருகில் அமர்ந்திருப்பதை நளன் பார்த்தார். அவற்றின் சிறகுகள் பொன் போல் ஒளிர்ந்தன. நளன், இவற்றின் சிறகுகளை விற்றால் பணம் பெறலாம் என்று எண்ணினார். இவ்வாறு எண்ணி, அவற்றைப் பிடிப்பதற்காகத் தன் ஆடையை அவற்றின் மேல் வீசினார். ஆனால் பறவைகள், அவருடைய ஆடையை எடுத்துக் கொண்டு பறந்துவிட்டன. இப்போது நளன் ஆடை இல்லாததால் தலைகுனிந்து பரிதாபமாக நின்றார். உடனே பறவைகள்— ''கெட்ட புத்தியுள்ளவனே! நீ நகரத்திலிருந்து ஒரே ஓர் ஆடை அணிந்து கொண்டு வெளியேறினாய். அதைப் பார்த்த எங்களுக்கு மிகவும் துக்கம் உண்டாயிற்று. இப்போது உன்னிடம் உள்ள அந்த ஓர் ஆடையையும் எடுத்துச் செல்கிறோம். நாங்கள் பறவைகள் இல்லை; சூதாட்டத்தின்போது வந்த பகடைக்காய்கள்'' என்று கூறின. நளன், இவ்விஷயத்தை தமயந்தியிடம் கூறினார்.

பின்னர், ''அன்பே! இங்கிருந்து பல பாதைகள் பிரிந்து செல்வதை, நீ காண்கிறாய். ஒன்று 'அவந்தி' நகரத்தை நோக்கிப் போகிறது; இரண்டாவது 'ருக்ஷவான் மலை' வழியாகத் தென்தேசத்திற்குப் போகிறது. முன்னால் 'விந்தியமலை' உள்ளது. இந்த 'பயோஷ்ணீ நதி' கடலில்



கூந்தல் இளங்குயிலும் கோமானும் கொண்டணைந்த
பூந்துகில் கொண் டந்தரத்தே போய்நின்று – வேந்தனே
நன்னாடு தோற்பித்தோன் நானேகாண் என்றதே
பொன்னாடு மானிறத்த புள்.

(நளவெண்பா, கலிதொடர் காண்டம் 263)

கலக்கிறது. இவை மாமுனிவர்களின் ஆசிரமங்கள். முன்னால் உள்ள பாதை 'விதர்ப்ப தேசம்' நோக்கிப் போகிறது. இது 'கோசல தேசம்' செல்லும் பாதை'' என்று நளன் பெரும் துக்கத்துடனும் சோகத்துடனும் வெவ்வேறு பாதைகளைப் பற்றிய விவரங்களையும், ஆசிரமங்களைப் பற்றியும் கூறினார்.

தமயந்தியின் கண்கள் நீரால் நிறைந்தன. அவள் தழுதழுத்த குரலில் சொன்னாள்— ''சுவாமி! நீங்கள் மனத்தில் என்ன எண்ணிக் கொண்டிருக்கிறீர்கள்? என் அங்கங்கள் தளர்ச்சி அடைகின்றன; இதயம் படபடக்கிறது. உங்கள் அரசு போய்விட்டது; செல்வம் போய்விட்டது; உங்கள் மேனியில் ஆடையில்லை. நீங்கள் களைப்புற்று, பசியாலும் தாகத்தாலும் தவிக்கிறீர்கள். மனித நடமாட்டமற்ற இந்தக் காட்டில், உங்களை விட்டுவிட்டு நான் தனியாக எங்கே போக முடியும்? உங்களோடு இருந்து உங்கள் துயரத்தைப் போக்குவேன். கணவன் துன்புறும் சமயத்தில் மனைவி அவனுக்கு மருந்து போல் ஆகிறாள். அவள் தைரியம் சொல்லி, கணவரின் துயரத்தைக் குறைக்கிறாள். இதை மருத்துவர்கள்கூட ஒப்புக் கொள்கிறார்கள்.''

நளன்— ''நீ சொல்வது சரி. மனைவியே உற்ற நண்பன்; மனைவியே மருந்து. நான், உன்னைத் தியாகம் செய்ய விரும்பவில்லை. நீ ஏன் இவ்வாறு சந்தேகப்படுகிறாய்?''

தமயந்தி— ''நீங்கள் என்னை விட்டுவிட விரும்பவில்லை. ஆனால், விதர்ப்ப தேசத்தின் வழியை ஏன் சொல்கிறீர்கள்? உங்களால் என்னைத் துறந்துவிட முடியாது என்று எனக்கு நிச்சயமாகத் தெரியும். இருந்தாலும் உங்கள் மனம் தலைகீழாக மாறியிருக்கிறது. அதனால்தான் இம்மாதிரி சந்தேகப்படுகிறேன். நீங்கள் பிரிந்து செல்லும் வழிகளைச் சொல்வதால், என் மனம் துன்பமடைகிறது. நீங்கள் என்னை, என் தந்தை அல்லது உறவினர் வீட்டிற்கு அனுப்ப விரும்பினால் சரி. நாம் இருவரும் சேர்ந்தே போவோம். என் தந்தை உங்களை உபசரிப்பார். நீங்கள் அங்கேயே சுகமாக வசிக்கலாம்.''

நளன்— "அன்பே! உன் தந்தை, ஓர் அரசர். நானும் ஒரு காலத்தில் அரசனாக இருந்தவன். இப்போது துன்பத்தில் இருக்கும்போது அவரிடம் அடைக்கலமாகப் போகமாட்டேன்."

நளன், தமயந்திக்கு விஷயங்களைப் புரியும்படி விளக்கிக் கூறினான். பிறகு ஒரே ஆடையால் இருவரும், உடலை மறைத்துக் கொண்டு இங்கும் அங்கும் அலைந்து கொண்டிருந்தார்கள். பசியாலும் தாகத்தினாலும் பீடிக்கப்பட்ட இருவரும் ஒரு பாழடைந்த சத்திரத்தில் வந்து தங்கினார்கள்.



## நளன், தமயந்தியைக் கைவிடுதல்; தமயந்தி, மகரிஷிகளின் தரிசனம் பெற்று, மன்னன் சுபாகுவின் மாளிகையில் வசித்தல்

பிருஹதச்வர் கூறினார்— யுதிஷ்டிரனே! அந்தச் சமயத்தில் நள மாமன்னரின் சரீரத்தில் ஆடையில்லை; பூமி மீது விரித்துக்கொள்ள பாய்கூட இல்லை. புழுதியினால் சரீரம் அழுக்கடைந்தது. இத்துடன் பசி, தாகம் – இவற்றின் துன்பம் வேறு. நள மகாராஜா வெறுந்தரையின் மீது உறங்கினார். தமயந்தியின் வாழ்க்கையிலும் இம்மாதிரி சூழ்நிலை வந்ததில்லை. அந்த சுகுமாரியும் அங்கேயே தூங்கினாள்.

தமயந்தி தூங்கியபிறகு நளமகாராஜனுடைய தூக்கம் கலைந்தது. துக்கம், சோகம் – இவற்றின் கடுமையினால் அயர்ந்து தூங்கவும் முடியவில்லை. கண்களைத் திறந்ததும் அவர் முன்னால் ராஜ்யம் பறிபோனது, உறவினர்களை விட்டுப் பிரிந்தது, பறவைகள் ஆடையை எடுத்துக் கொண்டு பறந்தது – இவை ஒவ்வொன்றாகக் காட்சியளித்தன. அவர் இம்மாதிரி எண்ணலானார்— 'தமயந்தி, என்னிடம் அன்பு செலுத்துகிறாள். என் மீது உள்ள காதலால்தான் இவ்வளவு துன்பத்தையும் பொறுத்துக் கொண்டிருக்கிறாள். இவளை

இங்கேயே விட்டுவிட்டுப் போனால், இவள் தன் தந்தை வீட்டிற்குப் போய்விடுவாள். என்னுடன் இருந்தால் துன்பத்திற்கு மேல் துன்பம்தான் அனுபவிக்க வேண்டிவரும். நான் இவளைவிட்டுப் போய்விட்டால், ஒருவேளை, இவள் நிம்மதி பெறலாம்.'

கடைசியில், 'தமயந்தியை அங்கேயே விட்டுவிட்டுப் போவதுதான் சரி' என்ற தீர்மானத்திற்கு வந்த நளன், 'தமயந்தி கற்புடைய மங்கை. இவளுடைய கற்பை யாரும் மாசுபடுத்த முடியாது' என்று அவளுடைய கற்பைப் பற்றிக் கவலையற்று, இவ்வாறு மீண்டும் யோசித்தார்— 'நான் ஆடையின்றி இருக்கிறேன். தமயந்தியின் சரீரத்தில் ஒரே ஆடைதான் இருக்கிறது. இருந்தபோதிலும் இவளுடைய ஆடையில் பாதியைக் கிழித்துக் கொள்வதுதான் நல்லது. வேறு வழியில்லை. ஆனால், எப்படிக் கிழிப்பது? ஒரு வேளை அவள் விழித்துக் கொண்டால்?' அவர் சத்திரத்தில் இங்குமங்கும் உலாவத் தொடங்கினார். அவர் பார்வை அங்கேயிருந்த ஒரு வாளின் மீது பட்டது. நளன், அந்த வாளை எடுத்து மெதுவாக, தமயந்தியின் ஆடையில் பாதியைக் கிழித்து, அதைத் தன் உடலில் அணிந்து கொண்டார். தமயந்தி ஆழ்ந்த உறக்கத்தில் இருந்தாள். நளன், அவளை விட்டுவிட்டு வெளியே கிளம்பினார். சிறிதுநேரம் கழித்து, அவர் மனது சிறிது அமைதி அடைந்ததும் சத்திரத்திற்குத் திரும்பி வந்து, தமயந்தியைப் பார்த்து அழத் தொடங்கினார்.

அவர் எண்ணினார்— 'இதுவரை எனது அந்தப்புரத்தில் பாதுகாப்பில் இருந்த என் உயிருக்கு உயிரானவளை ஒருவரும் தொடக்கூட முடியாது. இன்று இவள் அநாதைக்குச் சமமாக, பாதி ஆடையை உடுத்திப் புழுதி மேல் தூங்கிக் கொண்டிருக்கிறாள். நான் இல்லாமல் இவள் காட்டில் எப்படி இருப்பாள்? அன்பே! நீ அறநெறி வழுவாதவள். ஆகையால், சூரியன், வசு, ருத்ரன், அசுவினி குமாரர்கள், வாயு ஆகிய



ஒற்றைத் துகிலும் உயிரும் இரண்டாக
முற்றுந்தன் அன்பை முதலோடும் – பற்றி
அரிந்தான் அரிந்திட்ட டவள்நிலைமை நெஞ்சில்
தெரிந்தான் இருந்தான் திகைத்து.

(நளவெண்பா, கலிதொடர் காண்டம் 282)

தேவர்கள், உன்னைக் காப்பாற்றட்டும்.' அந்தச் சமயத்தில் நளனுடைய இதயம் துன்பத்தினால் துண்டுதுண்டாகச் சிதறுவது போலாயிற்று. ஊஞ்சலைப் போல் முன்னும்—பின்னுமாக, சத்திரத்திலிருந்து வெளியே கிளம்புவது, பிறகு திரும்புவது என்றவாறு இருந்தார். ஆனால், அவரது சரீரத்தில் கலிபுருஷன் வாசம் செய்து கொண்டு இருந்ததால், அவர் அறிவு மழுங்கிப் போய், தன் மனைவியைக் காட்டில் தனியாக விட்டுவிட்டு அங்கிருந்து சென்றார்.

தமயந்தி விழித்துக் கொண்டபோது, நளன் 'அங்கு இல்லாததைக் கண்டாள். திடுக்கிட்டு பயந்து போய் தமயந்தி அலறினாள்— "சுவாமி! அரசே! என் செல்வமான தாங்கள் எங்கே? நான் தனிமையில் பயந்து கொண்டிருக்கிறேன். தாங்கள் எங்கு போய்விட்டீர்கள்? போதும், அதிகமாக விளையாட வேண்டாம். கடுமையான உள்ளம் கொண்ட என் சுவாமி! என்னை ஏன் அச்சுறுத்துகிறீர்கள்? விரைவில் எதிரே வாருங்கள். கொடிகளின் மறைவில் மறைந்து கொண்டு ஏன் பேசாமல் இருக்கிறீர்கள்? துன்பத்தின் வயப்பட்டு இப்படிப் புலம்புகிறேன்; தாங்கள் பக்கத்தில் வந்து தைரியம் கொடுக்கக்கூடாதா? சுவாமி! என்னைப் பற்றியோ, மற்ற யாரைப் பற்றியோ எனக்குக் கவலையில்லை. இக்கொடிய காட்டில் தாங்கள் தனியாக எப்படி வசிப்பீர்கள்? என்ற ஒரே கவலைதான் எனக்கு. ஹே நாதா! களங்கமற்ற உள்ளம் கொண்ட தங்களை, இந்த நிலைக்குக் கொண்டுவரக் காரணமானவன், தங்களைக் காட்டிலும் பெருத்த துன்பத்தை அடைந்து, தன் வாழ்நாளைத் துன்பத்தோடு கழிக்கட்டும்."

இவ்விதமாகப் புலம்பிக் கொண்டு தமயந்தி இங்குமங்கும் ஓட ஆரம்பித்தாள். பைத்தியம் பிடித்தவள் போன்று சுற்றியலைந்து, ஒரு மலைப்பாம்பின் அருகில் வந்தாள். துயரத்தில் மூழ்கி இருந்த அவளுக்கு பாம்பு அருகில் இருப்பதுகூடத் தெரியவில்லை. மலைப்பாம்பு தமயந்தியை விழுங்க ஆரம்பித்தது. அந்தச் சமயத்திலும் தன்னைப் பற்றிக்



சங்க நிதிபோல் தருசந் திரன்சுவர்க்கி
வெங்கலிவாய் நின்றுலகம் மீட்டாற்போல் —
மங்கையைவெம்
பாம்பின்வாய் நின்றும் பறித்தான் பகைகடிந்த
காம்பின்வாய் வில்வேடன் கண்டு.

(நளவெண்பா, கலிதொடர் காண்டம் 306)

கவலைப்படாமல், நளன் எவ்வாறு தனியாக வசிப்பார்? என்று கவலைப்பட்டாள். அவள் கதறத் தொடங்கினாள்— ''சுவாமி! அநாதை போன்ற என்னை, இந்தப் பாம்பு விழுங்கிக் கொண்டிருக்கிறது. என்னை விடுவிக்க, தாங்கள் ஏன் ஓடி வரவில்லை?'' தமயந்தியின் கூக்குரல் அங்கு சுற்றிக் கொண்டிருந்த ஒரு வேடனின் காதில் பட்டது. அவன் அங்கு ஓடி வந்து பார்த்தபோது, தமயந்தியை ஒரு மலைப்பாம்பு விழுங்கிக் கொண்டிருந்ததைப் பார்த்தான். தன் கூரிய ஆயுதத்தால் பாம்பின் வாயைக் கிழித்தெறிந்தான். தமயந்தியை விடுவித்து, நீராடச் செய்தான். தைரியம் கூறி உணவு உண்ணச் செய்தான். தமயந்தி கொஞ்சம் அமைதி அடைந்தாள்.

பின்னர், வேடன் அவளிடம்— ''பெண்மணியே! நீ யார்? உன் துயரம் என்ன? எந்த உத்தேசத்துடன் இங்கே வந்திருக்கிறாய்?'' என்று கேட்டான். தமயந்தி வேடனிடம் தன் துன்பக் கதையைக் கூறினாள். தமயந்தியின் அழகு, பேச்சு நயம், மனத்தைக் கொள்ளை கொள்ளக்கூடிய வசீகரம் – இவற்றைக் கண்ட வேடன் காமவசப்பட்டான். இனிய வார்த்தைகளைப் பேசி, தமயந்தியைத் தன்வசப்படுத்த நினைத்தான். கொடியவனான வேடனின் எண்ணத்தைப் புரிந்துகொண்ட தமயந்தி, கோபத்தால் உள்ளம் கொதித்தாள். தமயந்தி, வேடனின் தீயசெயல்களைத் தடுத்துவிடத் துடித்தாள். ஆனால், எவ்விதத்திலும் அவன், அவள் வார்த்தைகளைக் கேட்கவில்லை. அதனால் வெகுண்டெழுந்து அவனை நோக்கி— ''நிஷத நாட்டு மன்னரான நளனைத் தவிர, வேறு எந்த ஆண்மகனையும் நான் கனவில்கூட நினைக்கவில்லை என்பது சத்தியமானால், இந்த நிமிடமே இந்தப் பாவியின் உயிர் பிரிந்து உடல் பூமியில் விழட்டும்'' என்று சபித்தாள். தமயந்தியின் வாயிலிருந்து இந்தச் சாபம் வெளிவந்தவுடன் வேடனுடைய உயிர் பிரிந்தது. அவன், எரிந்து விழும் கட்டைகள் போல் பூமியின் மீது விழுந்தான்.



தீக்கட் புலிதொடரச் செல்லும் சிறுமான்போல்
ஆக்கை தளர வலமந்து – போக்கற்றுச்
சீறா விழித்தாள் சிலைவேடன் அவ்வளவில்
நீறாய் விழுந்தான் நிலத்து.

(நளவெண்பா, கலிதொடர் காண்டம் 310)

வேடன் இறந்த பின், தமயந்தி நளனைத் தேடிக் கொண்டு மனித நடமாட்டமற்ற பயங்கரமான காட்டை அடைந்தாள். மலைகள், நதிகள், சிற்றாறுகள், காடுகள், கொடூரமான விலங்குகள், பறவைகள் – இவற்றைப் பார்த்துக் கொண்டே, பிரிவாற்றாமையின் துயரத்தால் நளனைப் பற்றி விசாரித்துக் கொண்டே வடக்கு நோக்கிப் போனாள். மூன்று பகல், மூன்று இரவுகள் கழிந்த பின்னர், தன் முன்னால் ஒரு தபோவனம் இருப்பதைக் கண்டாள். அந்த ஆசிரமத்தில் வசிஷ்டர்–பிருகு–அத்ரி முனிவர்களுக்கு இணையான மிதமான ஆகாரம் கொள்பவர்களும், புலனடக்கம் உள்ளவர்களும், புனிதமானவர்களும், புலன்களை வென்றவர்களும், தபஸ்விகளுமான முனிவர்கள் வாழ்ந்து கொண்டிருந்தார்கள். அவர்கள் மரவுரியும் மான்தோலையும் அணிந்து கொண்டிருந்தார்கள். இப்போது தமயந்திக்குக் கொஞ்சம் தைரியம் வந்தது. அவள் ஆசிரமத்திற்குப் போய் மிகுந்த வணக்கத்துடன், தபஸ்வியான ரிஷிகளை வணங்கி, கைகூப்பிக் கொண்டு நின்றாள். ரிஷிகள் தமயந்திக்கு நல்வரவு கூறி உபசரித்தனர்.

''உட்காரம்மா! உனக்கு நாங்கள் என்ன உதவி செய்ய வேண்டும்?'' என்று வினவினர். உயர்குலத்துப் பெண்மணிக்கு ஏற்றவாறு தமயந்தி கேட்டாள்— ''தங்களுடைய தவம், அக்னி, தர்மம், பசுக்கள், பறவைகள் எல்லாம் க்ஷேமமா? உங்கள் அனுஷ்டானங்களுக்கு எந்த இடையூறும் இல்லையே?''

ரிஷிகள்— ''கல்யாணி! எல்லா வகையிலும் நாங்கள் நலமாக இருக்கிறோம். நீ யாரம்மா? எந்த நோக்கத்துடன் இங்கு வந்திருக்கிறாய்? எங்களுக்கு மிகவும் ஆச்சரியமாக இருக்கிறது. நீ வனம்–மலை–நதியின் அதிஷ்டான தேவதையா?''

தமயந்தி— ''மகாத்மாக்களே! நான் எந்த தேவியோ, தேவதையோ இல்லை. நான் ஒரு மனிதகுலப் பெண். நான் விதர்ப்ப தேச மன்னன் பீமனின் மகள். புத்திமானும் புகழ்வாய்ந்தவரும் மாவீரரும் ஜயமுள்ளவருமான நிஷத

நாட்டு மன்னன் நளன், என் கணவர். கபடம் நிறைந்த சூதாட்டத்தில் கைதேர்ந்த கயவர்கள், தர்மாத்மாவான என் கணவரைச் சூதாட்டம் ஆடத் தூண்டிவிட்டு, அவரது அரசையும் செல்வத்தையும் கவர்ந்து கொண்டார்கள். அந்த நளனுடைய மனைவி தமயந்திதான் நான். அவர் விதியின் பயனாக, என்னை விட்டுப் பிரிந்து விட்டார். வீரரும், அஸ்திர வித்தையில் நிபுணரும், தர்மாத்மாவுமான என் கணவரைத் தேடுவதற்காக, நான் கானகத்தில் அலைந்து கொண்டிருக்கிறேன். விரைவில் அவரைப் பார்க்காவிட்டால், என்னால் உயிர் வாழ முடியாது. அவரில்லாத என் வாழ்க்கை வீணானது. இப்பிரிவாற்றாமையின் துயரத்தை எத்தனை நாள்தான் என்னால் பொறுத்துக் கொண்டிருக்க முடியும்?''

தவசிகள் கூறினார்கள்— ''மங்களமானவளே! தவத்தின் தூய்மை கொண்ட பார்வையோடு பார்க்கும்போது, வரப்போகும் காலத்தில் உனக்கு மிகவும் சுகம் கிடைக்கும்; சிறிது காலத்திலேயே நளனைக் காணப் போகிறாய் என்பது தெரிகிறது. தர்மாத்மாவான நிஷத நாட்டு மன்னன் விரைவிலேயே எல்லாத் துன்பங்களிலிருந்தும் விடுபட்டுச் செல்வம் நிறைந்த நிஷத நாட்டை மறுபடியும் ஆளப் போகிறான். அவனது எதிரிகள் அஞ்சி ஒளிவார்கள்; நண்பர்கள் சுகமடைவார்கள்; குடிமக்கள் அவனை மீண்டும் பார்த்து ஆனந்தமடைவார்கள்.''

இவ்வாறு சொல்லிவிட்டு, அந்த தபஸ்விகள் ஆசிரமத்தோடு கூட மாயமாக மறைந்தனர். இந்த ஆச்சரியமான நிகழ்ச்சியைக் கண்ட தமயந்தி வியந்தாள்! 'நான் கண்டதென்ன கனவா?' என்று எண்ணினாள். 'இந்த நிகழ்ச்சி எப்படி ஏற்பட்டது? அந்த தபஸ்விகள், அவர்களது ஆசிரமம், புனிதநீர் நிறைந்த நதி, மலர்—பழம் நிறைந்த மரங்கள் – இவையெல்லாம் எங்கே போய்விட்டன?' என்று யோசித்தாள். அவள் கவலை கொண்டாள்; முகம் களையிழந்து வாடியது.

அங்கிருந்து புலம்பிக் கொண்டே நடந்து சென்று கொண்டிருந்த தமயந்தி, ஓர் அசோக மரத்தின் அருகில் சென்றாள். அவள் கண்களிலிருந்து நீர் அருவியாகப் பெருகியது. அவள் அசோக மரத்திடம் தழுதழுத்த குரலில்— ''சோகமேயில்லாத ஏ அசோக மரமே! நீ, மாமன்னர் நளனை இவ்வழியில் கண்டாயா? 'அசோகம்' என்றால் சோகத்தை நாசம் செய்பவன் என்பது பொருள் ஆயிற்றே. நீ, என் சோகத்தை நீக்கிவிடு. உன் பெயரைப் பொருள் படைத்ததாகச் செய்'' என்று வேண்டிக் கொண்டு, தமயந்தி அசோக மரத்தை வலம் வந்து தொடர்ந்து நடந்தாள். பயங்கரமான காட்டில் மரங்கள், குகைகள், மலையுச்சிகள், நதிகள் – இவற்றின் அருகில் தன் கணவரைத் தேடிக் கொண்டு தமயந்தி வெகுதூரம் கடந்து விட்டாள். அங்கே யானை, குதிரை, தேர் – இவற்றோடுகூட வணிகர்களின் கூட்டம் போவதைக் கண்டாள். வணிகர்களின் தலைவனோடு பேசி, அவர்கள் 'சுபாகு' என்ற மன்னன் ஆளும் சேதி நாட்டை நோக்கிச் சென்று கொண்டிருப்பதை அறிந்து கொண்டாள். தானும் அவர்களுடன் சேர்ந்து கொண்டாள். அவள் மனத்தில் தன் கணவரைக் காணவேண்டும் என்ற விருப்பம் வளர்ந்து கொண்டே இருந்தது.

சில நாட்கள் பயணம் செய்த பின்னர், அந்த வணிகர்கள் ஒரு கொடிய காட்டை அடைந்தனர். அங்கே ஓர் அழகான நீரோடை. நீண்ட பயணத்தின் காரணமாக அனைவரும் களைத்திருந்தனர். ஆகவே, அங்கேயே அவர்கள் கூடாரங்கள் அமைத்துக் கொண்டனர். ஆனால், விதி வணிகர்களுக்கு எதிராக இருந்தது. இரவில் காட்டு யானைகள் வணிகர்களின் [சுமைகளைத் தாங்கி வந்த] யானைகளைத் தாக்கின. இந்த விபத்தினால் வணிகர்களின் கூட்டம் பெரும்பாலும் அழிந்துவிட்டது. இந்த இரைச்சலைக் கேட்டு தமயந்தியின் உறக்கம் கலைந்தது. இந்தக் கோரமான காட்சியைக் கண்ட அவள் பைத்தியம் பிடித்தது போல் ஆகிவிட்டாள். அதுவரை இம்மாதிரியான காட்சியை அவள் கண்டதில்லை.



அவள் பயந்துபோய் அங்கிருந்து தப்பிப் பிழைத்துக் கொண்ட மனிதர்கள் நின்று கொண்டிருந்த இடத்தை அடைந்தாள். பிறகு, இந்தப் பெரிய விபத்தில் உயிர் தப்பிய வேதம் கற்றவர்களும், புலனடக்கம் நிறைந்தவர்களுமான அந்தணர்களுடன்கூட, பாதி ஆடையுடுத்தியவளாகச் செல்லத் தொடங்கினாள். மாலை நேரத்தில் சேதி நாட்டு மன்னன் சுபாகுவின் தலைநகரத்திற்குப் போய்ச் சேர்ந்தாள்.

அரச பாட்டையில், அரைகுறையான ஆடை அணிந்து கொண்டு சென்ற தமயந்தியைப் பார்த்த நகர மக்கள், அவளை ஒரு பைத்தியக்காரி என்று எண்ணினார்கள். தமயந்தி அரண்மனைக்கு அருகே வந்து சேர்ந்தாள். அந்தச் சமயம் ராஜமாதா அரண்மனையின் சாளரத்தின் அருகே அமர்ந்திருந்தாள். சிறு குழந்தைகளால் சூழப்பட்ட தமயந்தியைக் கண்டு, அவள் ஒரு பணிப்பெண்ணிடம்— "அங்கே பார்! அந்தப் பெண் மிகவும் துன்பத்தை அடைந்திருப்பவள் போல் தெரிகிறது. தனக்கு ஒரு புகலிடம் தேடிக் கொண்டிருப்பதாகவும் தெரிகிறது. குழந்தைகள், அவளைத் தொந்தரவு செய்கிறார்கள். நீ போய் அவளை அழைத்து வா. அவளது அழகு, என் மாளிகைக்கே அழகூட்டும் போல் இருக்கிறது" என்று கூறினாள். மகாராணியின் கட்டளைப்படி பணிப்பெண், தமயந்தியை அரண்மனைக்கு அழைத்து வந்தாள். தமயந்தியின் அழகு நிறைந்த மேனியைப் பார்த்த மகாராணி அவளிடம்— "பெண்ணே! நீ பார்ப்பதற்கு துயரமே உருவான தோற்றம் அளிக்கிறாய். ஆனால், உன் சரீரம் எவ்வாறு இத்தகைய பொலிவுடன் விளங்குகிறது? நீ யார்? யாருடைய மனைவி? உதவியற்ற நிலையிலும் யாரிடமும் பயப்படவில்லையே!" என்று வினவினாள்.

தமயந்தி பதிலுரைத்தாள்— "அம்மா! நான் உயர் குலத்தில் பிறந்தவள். ஆனால், பணிப்பெண்ணின் வேலையைச் செய்கிறேன். அந்தப்புரத்தில் வாழ்ந்தாகிவிட்டது. நான் எங்கும் வசிப்பேன். கனியும் கிழங்கும் உட்கொண்டு காலம் கழிக்கிறேன். என் கணவர் குணசாலி. என்னிடம் மிகுந்த அன்புகொண்டவர். எனது தீவினைப்பயனாக, நான் தூங்கிக் கொண்டிருந்த சமயம், என்னை விட்டுவிட்டு என் கணவர் எங்கு சென்றாரோ, தெரியவில்லை. இரவும் பகலும் அவரைத் தேடி அலைந்து கொண்டிருக்கிறேன்."

இவ்வாறு கூறிக் கொண்டிருக்கும்பொழுதே, தமயந்தியின் கண்களில் கண்ணீர் பொங்கி வழிந்தது. தமயந்தியின்



உன்றலைவன் தன்னை யொருவகையால் நாடியே
தந்து விடுமளவும் தாழ்குழலாய் – என்றனுடன்
இங்கே இருக்க இனிதென்றா ளேந்திழையைக்
கொங்கேயுந் தாராள் குறித்து.

(நளவெண்பா, கலிதொடர் காண்டம் 321)

துக்கம் நிறைந்த புலம்பலைக் கேட்ட ராஜமாதாவின் உள்ளம் உருகிற்று. அவள் கூறினாள்— "மங்களமானவளே! உன்னிடத்தில் எனக்கு இயற்கையாகவே அன்பு உண்டாகிறது. நீ என்னிடம் இரு. உன் கணவரைத் தேடுவதற்கு, நான் ஏற்பாடு செய்கிறேன்."

தமயந்தி கூறுகிறாள்— "அம்மா! ஒரு நிபந்தனையின் பேரில்தான் உங்கள் வீட்டில் என்னால் வசிக்க முடியும். ஒருபொழுதும் நான் எச்சிலை உண்ணமாட்டேன்; யாருடைய பாதங்களையும் கழுவ மாட்டேன்; பிற ஆடவர்களிடம் பேச மாட்டேன்; ஆடவன் யாரேனும் என்னிடம் தகாத முறையில் நடந்து கொண்டால், அவனுக்கு தண்டனை தர நேரிடும். மேலும் மேலும் இப்படி நடந்து கொண்டால், அவனுக்கு மரணதண்டனை கூடக் கொடுக்க நேரும். என் கணவரைத் தேடுவதற்காகவே அந்தணர்களுடன் பேசுவேன். இந்த நிபந்தனையை நீங்கள் ஏற்றுக் கொண்டால்தான், என்னால் இங்கே வசிக்க முடியும்."

தமயந்தியின் நிபந்தனைகளைக் கேட்ட ராஜமாதா மிகவும் மகிழ்ச்சியடைந்து, "அப்படியே ஆகட்டும்" என்று கூறினாள். பிறகு, தன் மகள் சுநந்தாவை அழைத்துக் கூறினாள்— "மகளே! இந்தப் பெண்ணை, ஒரு பெண் தெய்வம் என்று எண்ண வேண்டும். வயதில் இவள் உனக்குச் சமமாக இருக்கிறாள். ஆகையால், இவளைத் தோழியாக எண்ணி, அரண்மனையில் வைத்துக் கொள். இவளோடு மனமகிழ்ச்சியுடன் இரு." சுநந்தா மகிழ்ச்சியுடன் தமயந்தியைத் தன் மாளிகைக்கு அழைத்துச் சென்றாள். அங்கே தமயந்தி வசிக்கத் தொடங்கினாள்.



## நளனுடைய வடிவம் மாறுதல்; ருதுபர்ணனிடம் தேரோட்டியாதல்; பீமன், நளனையும் தமயந்தியையும் தேடுதல்; தமயந்தியைக் காணல்

மகரிஷி பிருஹதச்வர் கூறினார்— யுதிஷ்டிரனே! உறங்கிக் கொண்டிருந்த தமயந்தியைப் பிரிந்து, நள மகாராஜா வெளியேறிய சமயத்தில், காட்டில் பெரிய காட்டுத்தீ பற்றிக் கொண்டது. நளன் திடுக்கிட்டு நின்றார். ''நள மன்னரே! விரைந்தோடி வா; என்னைக் காப்பாற்று'' என்ற ஓலம், அவர் காதில் பட்டது. ''பயப்படாதே'' என்று பதில் குரல் கொடுத்தார், நளன். அவர் ஓடிச் சென்று காட்டுத்தீயில் நுழைந்து பார்த்தபோது, அங்கே நாகராஜனான கார்கோடகன் சுருண்டு படுத்துக் கிடந்தான்.

அவன் கைகூப்பிக் கொண்டு நளனிடம்— ''அரசே! நான் கார்கோடகன் என்ற நாகம். முன்பொரு சமயம் தேவரிஷியான நாரதரை ஏமாற்றினேன். அதனால் அவர், 'நள மன்னர் உன்னைத் தொடும்வரை இங்கேயே படுத்துக்கிட. நளன் உன்னைத் தூக்கினால், நீ சாபத்திலிருந்து விடுபடுவாய்' என்று சாபம் கொடுத்தார். இப்போது சாபத்திலிருந்து என்னை விடுவித்துக் காப்பாற்றுவீர். உமது நலனுக்கான அறிவுரையைச் சொல்வேன். உமது நண்பனாகவும் ஆவேன். கனமான என் சரீரத்தைக் கண்டு அஞ்சாதீர்! நான் பாரமில்லாத சிறிய வடிவம் எடுத்துக் கொள்வேன்.'' இவ்வாறு கூறிவிட்டு, கார்கோடகன் ஒரு பெருவிரல் அளவிற்கு ஆனான். நளன், அவனைத் தூக்கிக் காட்டுத் தீயிலிருந்து வெளியே கொண்டு வந்தார்.

''அரசே! இப்போது என்னைப் பூமியின் மேல் போடாதீர். ஒன்று, இரண்டு என்று எண்ணிக் கொண்டே சில அடிதூரம் நடந்து செல்வீர்'' என்று கார்கோடகன் கூறினான். தரையின் மீது நடந்து கொண்டு, பத்தாவது அடியை வைத்ததும் 'தஶ' [அதாவது பத்து] என்று நளன் கூறினார். கூறியவுடன்



சீரியாய் நீயெடுப்பத் தீமை கெடுகின்றேன்
கூருந் தழலவித்துக் கொண்டுபோய் – பாரில்
விடுகென்றான் மற்றந்த வெந்தழால் வெம்மைப்
படுகின்றான் வேல்வேந்தைப் பார்த்து.
(நளவெண்பா, கலிதொடர் காண்டம் 340)

கார்கோடகன் நளனைக் கடித்தான். கார்கோடகன் ஒரு நியமம் கொண்டிருந்தான். 'தஸ' [கடி] என்றால்தான் கடிப்பான்; இல்லையென்றால் கடிக்க மாட்டான். கார்கோடகன் கடித்த மாத்திரத்தில் நளனுடைய வடிவம் மாறியது. கார்கோடகன், தனது பழைய வடிவத்தை அடைந்தான்.

ஆச்சரியமடைந்த நளனிடம், அவன் கூறினான்— "உம்மை ஒருவரும் அடையாளம் கண்டு கொள்ளக்கூடாது என்பதற்காகவே, உமது உருவத்தை மாற்றியிருக்கிறேன். கலிபுருஷன், உமக்கு மிகுந்த துன்பத்தைக் கொடுத்து வருகிறான். என் விஷம் காரணமாக, உமது உடலில் உள்ள அவன் துன்பப்பட்டுக் கொண்டிருப்பான். நீர் என்னைக் காப்பாற்றியிருக்கிறீர். இனி கொடிய விலங்கு–பறவைகளிலிருந்தும், வேதமறிந்த அந்தணர்களின் சாபத்தாலும், உமக்கு எந்தத் தீங்கும் ஏற்படாது. இனி எந்த விஷமும் உம்மை ஒன்றும் செய்யாது. போரில் உமக்கு எப்போதும் வெற்றி உண்டாகும். உமது பெயரை 'பாகுகன்' என்று மாற்றிக் கொள்வீராக. சூதாட்டத்தில் நிபுணனான 'ருதுபர்ணன்' என்ற மன்னனின் நகரமான அயோத்திக்குச் செல்வீர். அவனுக்கு குதிரை பற்றிய வித்தையைக் கற்றுக் கொடுப்பீரர்க. அவன், உமக்கு சூதாட்டத்தின் நுட்பங்களைச் சொல்லிக் கொடுப்பான்; உமது நண்பனாகவும் ஆவான். சூதாட்டத்தின் நுட்பங்களை நீங்கள் தெரிந்துகொண்ட பின்னர், மனைவி, மகள், மகன், அரசு அனைத்தையும் அடைவீர். உமது பழைய வடிவத்தைப் பெற விரும்பினால், என்னை . மனத்தால் நினைத்து, நான் கொடுக்கும் ஆடைகளை அணிந்து கொள்வீர்." இவ்வாறு கூறிவிட்டு, கார்கோடகன் இரண்டு திவ்யமான ஆடைகளை, நளனுக்குக் கொடுத்துவிட்டு மறைந்தான்.

அங்கிருந்து புறப்பட்டுச் சென்ற நளன், பத்தாவது நாளன்று அயோத்திக்குப் போய்ச் சேர்ந்தார். அரண்மனைக்குச் சென்று, அரச சபையில் தன்னைப் பற்றிக் கூறிக்

கொண்டார்— ''என் பெயர் பாகுகன். குதிரை பற்றிய வித்தையை நன்றாக அறிந்தவன். குதிரை ஏற்றமும், அதை விதவிதமாக ஓடும்படி செய்யவும் எனக்குத் தெரியும். இந்த வித்தையில் எனக்கு இணையானவர்கள் யாருமில்லை. பொருளாதாரம் தொடர்பான விஷயங்களிலும், வேறு பெரிய பிரச்னைகளிலும் யோசனை கூறுவேன். நன்றாகச் சமையல் செய்வேன். என் கைத்திறமையைக் கொண்டு எல்லா வேலைகளையும், கடினமான வேலைகளையும் கூடச் செய்வேன். என் தொழில் திறமையைப் பார்த்து, என்னை வேலைக்காரனாக வைத்துக் கொள்ளுங்கள்.''

மன்னர் ருதுபர்ணன் கூறினார்— ''பாகுகா! உனது வரவு நல்வரவாகுக. இனி எல்லா வேலைகளும் உன் பொறுப்பில் இருக்கும். விரைவாக ஓடும் குதிரை சவாரியை, நான் அதிகம் விரும்புகிறேன். என் குதிரைகள் மிக வேகமாக ஓடும்படி செய். உன்னைக் குதிரை லாயத்திற்குத் தலைவனாக நியமிக்கிறேன். உனக்கு மாதம் பத்தாயிரம் தங்க நாணயங்கள் தருவேன். மேலும் வார்ஷ்ணேயனும் [நளனுடைய பழைய தேரோட்டி], ஜீவலனும் உன்னுடன் இருப்பார்கள். மகிழ்ச்சியாக நீ, என் அரச சபையில் இரு.'' ருதுபர்ணராஜாவின் உபசரிப்பைப் பெற்ற நளன், பாகுகன் வடிவத்தில் வார்ஷ்ணேயனுடனும் ஜீவலனுடனும் அயோத்தியில் வசிக்கத் தொடங்கினார். ஒவ்வொரு இரவிலும் தமயந்தியை நினைத்துக் கொண்டு, ''தபஸ்வினியான தமயந்தி பசியாலும் தாகத்தாலும் வருந்தி, இந்த மூர்க்கனை நினைத்துக் கொண்டிருப்பாள். எங்கு உறங்குகிறாளோ தெரியவில்லை. தன் வாழ்க்கையை நடத்துவதற்கு யாரை அண்டி இருக்கிறாளோ?'' என்று நளன் புலம்புவார். மன்னர் ருதுபர்ணனின் அருகிலேயே அவர் இருந்தபோதிலும், யாரும் அவரை அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை.

விதர்ப்ப தேசத்து அரசன் பீமனுக்கு, தன் மருமகன் நளன் அரசை இழந்து, தன் மகளுடன் காட்டிற்குச் சென்று



அன்னம் மிதிப்ப அலர்வழியும் தேறல்போய்ச்
செந்நெல் விளைக்குந் திருநாடர் – மன்னா
மடைத்தொழிலும் தேர்த்தொழிலும்
வல்லவன்யான் என்றான்
கொடைத்தொழிலின் மிக்கான் குறித்து.

(நளவெண்பா, கலிதொடர் காண்டம் 361)

விட்டார் என்ற செய்தி கிடைத்தது. உடனே அந்தணர்களை அழைத்தார். அவர்களுக்கு நிறைய செல்வத்தை அளித்தார். ''பூமி எங்கும் சுற்றி, நள—தமயந்தி இருக்குமிடத்தைத் தேடிக் கண்டுபிடித்துச் சொல்லுங்கள்'' என்று அவர்களிடம் வேண்டிக் கொண்டார். ''இந்தப் பணியை நிறைவேற்றும் அந்தணருக்கு ஆயிரம் பசுக்களும் கொடுத்து, நாட்டின் ஒரு பகுதிக்கு அதிபதியாகவும் செய்வேன். அவர்களை அழைத்து வர இயலாமற்போனாலும், இருக்குமிடத்தையாவது தெரிந்து சொன்னால் பத்தாயிரம் பசுக்கள் கொடுப்பேன்'' என்று வாக்களித்தார். நள—தமயந்தி இருக்குமிடத்தைத் தேடிக் கண்டுபிடிக்க, அந்தணர் கூட்டம் மகிழ்ச்சியுடன் கிளம்பியது.

நள—தமயந்தி இருக்குமிடத்தைத் தெரிந்துவர, 'சுதேவன்' என்ற பெயருள்ள அந்தணர், சேதி நாட்டுத் தலைநகருக்குப் போனார். அவர் அரண்மனையில் தமயந்தியைக் கண்டார். அந்தச் சமயத்தில் அரண்மனையில் 'புண்யாஹவாசனம்' என்ற புனிதச் சடங்கு நடந்து கொண்டிருந்தது. தமயந்தியும் சுநந்தாவும் ஒன்றாக அமர்ந்து, அந்தச் சுபகாரியத்தைப் பார்த்துக் கொண்டிருந்தனர். தமயந்தியைப் பார்த்த சுதேவர், 'இவள் பீம மகாராஜாவின் புதல்வியேதான். முன்பு நான் இவளைப் பார்த்தபோது எப்படி இருந்தாளோ, அப்படியேதான் இப்போதும் இருக்கிறாள். மிகவும் நல்லதாயிற்று; வந்த காரியம் நிறைவேறிவிட்டது' என்று எண்ணினார். பிறகு தமயந்தியின் அருகில் சென்று, ''விதர்ப்ப மன்னரின் மகளே! நான், உன் சகோதரனின் நண்பனான சுதேவன் என்ற அந்தணன். அரசர் பீமனுடைய கட்டளைப்படி, உன்னைத் தேடுவதற்காக இங்கு வந்துள்ளேன். உன் தாய்—தந்தையர், உடன்பிறந்தோர் அனைவரும் நலமாக இருக்கின்றனர். உன் இரு குழந்தைகளும்கூட விதர்ப்ப தேசத்தில் நலமுடன் இருக்கிறார்கள். உன் பிரிவினால் குடும்பத்தினர் அனைவரும் உயிரையே இழந்ததுபோல் இருக்கிறார்கள். உங்களைத் தேடுவதற்காக, நூற்றுக்கணக்கான அந்தணர்கள் பூமியெங்கும் சுற்றிக் கொண்டிருக்கிறார்கள்'' என்று கூறினார்.

தாமஞ்சே ரோதித் தமயந்தி நின்றாளை
ஆமென் றறியா அருமறையோன்......

(நளவெண்பா, கலிதொடர் காண்டம் 324)



தமயந்தி, அந்தணரை அடையாளம் கண்டு கொண்டாள். அவள், எல்லோருடைய நலனையும் வரிசையாகக் கேட்கத் தொடங்கினாள். பேசிக் கொண்டிருக்கும் பொழுதே அழுது விட்டாள். பேசிக் கொண்டு இருக்கும்போதே, தமயந்தி அழுவதைக் கண்ட சுநந்தா பயந்து போய், தன் தாயாரிடம் எல்லா விவரங்களையும் கூறினாள். ராஜமாதா அந்தப்புரத்திலிருந்து வெளியே வந்து— ''அந்தணரில் சிறந்தவரே! இவள் யாருடைய மனைவி? யாருடைய மகள்? தன் சுற்றத்தவரிடமிருந்து ஏன் பிரிந்திருக்கிறாள்? இவளை எப்படி அடையாளம் கண்டு கொண்டீர்கள்?'' என்று கேட்டாள்.

சுதேவர், நள–தமயந்தியினுடைய முழு வரலாற்றையும் கூறினார். நீறுபூத்த நெருப்பை அதன் வெம்மையினால் அறிவது போல, இந்தப் பெண்ணின் அழகிய வடிவத்தையும் நெற்றியையும் கண்டு அடையாளம் தெரிந்து கொண்டேன் என்றார். சுநந்தா, தன் கைகளால் தமயந்தியின் நெற்றியைத் துடைத்தாள். புருவங்களிடையே சந்திரனைப் போன்ற சிவப்புச் சின்னம் தெரிந்தது. நெற்றியில் அந்தச் செந்நிற மச்சத்தைக் கண்ட சுநந்தாவும் ராஜமாதாவும் அழுதுவிட்டனர். ராஜமாதா, தமயந்தியைத் தன் மார்போடு அணைத்துக் கொண்டு, ''தமயந்தி! இந்த மச்சத்தின் மூலமாக, நீ என் சகோதரியின் மகள் என்று கண்டு கொண்டேன். உன் தாய் என் உடன் பிறந்தவள். நாங்கள் இருவரும் தசார்ண தேசத்து அரசன் 'சுதாமா'வின் மக்கள். என் தந்தையின் வீட்டில்தான் நீ பிறந்தாய். அப்போது உன்னைப் பார்த்துள்ளேன். உன் தந்தையின் வீடு போல் இந்த வீடும் உன்னுடையதே. இங்குள்ள செல்வம் எப்படி என்னுடையதோ, அது உன்னுடையதும் ஆகும்'' என்று கூறினாள்.

தமயந்தி மிக்க மகிழ்ச்சியடைந்தாள். தன் தாயின் சகோதரியை [சிற்றன்னையை] வணங்கிவிட்டுக் கூறினாள்— ''என்னை நீங்கள் அடையாளம் கண்டு கொள்ளாததால்



கந்தனையும் கன்னியையும் கண்டாயி னுஞ்சிறிது
தன்துயரம் தீர்ந்து தனியாறத் – தந்தை
பதியிலே போக்கினான் சேதியர்கோன் பண்டை
விதியிலே போந்தாளை மீண்டு.

(நளவெண்பா, கலிதொடர் காண்டம் 328)

என்ன? இங்கு உங்கள் மகள் மாதிரிதானே இருந்து வருகிறேன். என் விருப்பங்களை நீங்கள் நிறைவேற்றி உள்ளீர்கள். என்னைக் காப்பாற்றியிருக்கிறீர்கள். இங்கு இன்னும் அதிக சௌக்கியத்துடன் இருந்தேன் என்பதில் சந்தேகமில்லை. ஆனால், வெகுநாட்களாகச் சுற்றி அலைந்து கொண்டிருக்கிறேன். எனது குழந்தைகள் இருவரும் என் தந்தை வீட்டில் இருக்கிறார்கள். அவர்கள், தம் தந்தையின் பிரிவினால் வருந்திக் கொண்டிருப்பார்கள். அவர்கள் எப்படி இருக்கிறார்களோ தெரியவில்லை. எனக்கு நீங்கள் உதவி செய்ய விரும்பினால், என்னை விதர்ப்ப தேசத்திற்கு அனுப்பி வையுங்கள்.''

இதைக் கேட்ட அரசமாதேவி மிகவும் மகிழ்ச்சியடைந்தாள். உணவு, உடை மற்றும் பல பொருட்களையும் பரிசளித்து, தமயந்திக்கு விடைகொடுத்து, பாதுகாப்புக்காக ஒரு பெரிய படையுடன் பல்லக்கில் அனுப்பி வைத்தாள். விதர்ப்ப தேசத்தில் தமயந்திக்கு அன்பான வரவேற்பு அளிக்கப்பட்டது. தமயந்தி தன் சகோதரர்கள், குழந்தைகள், தாய்–தந்தையர், தோழியர் அனைவருடனும் ஒன்றுசேர்ந்தாள்.

பின்னர் தமயந்தி தேவதைகளையும் அந்தணர்களையும் பூஜை செய்தாள். மகளைக் கண்ட பீம ராஜாவுக்கு மிகுந்த மகிழ்ச்சி உண்டாயிற்று. அவர் சுதேவருக்கு ஆயிரம் பசுக்கள், கிராமங்கள், செல்வம் எல்லாவற்றையும் கொடுத்து, அவரை மகிழ்வுறச் செய்தார்.



## நளனைத் தேடுதலும், ருதுபர்ணனுடைய விதர்ப்ப தேசப் பயணமும், கலி நீங்குதலும்

மகரிஷி பிருஹதச்வர் கூறுகிறார்— யுதிஷ்டிரனே! தன் பிறந்த வீட்டில், ஒருநாள் ஓய்வெடுத்துக் கொண்டபின், தமயந்தி தன் தாயிடம் கூறினாள்— ''நான், உங்களிடம்

உண்மையைக் கூறுகிறேன். நான் உயிருடன் இருக்க வேண்டுமென்று நீங்கள் விரும்பினால், என் கணவரைத் தேடும் பணியைச் செய்யுங்கள்.''

ராணியும் மிகவும் கவலையுற்று, தன் கணவரான மன்னர் பீமனிடம்— ''தமயந்தி, தன் கணவனைப் பற்றி மிகவும் கவலையுடன் இருக்கிறாள்; தன் கணவனைத் தேடித் தரும்படி கூறுகிறாள்'' என்றாள். அரசரும் தன்னை அண்டியிருந்த அந்தணர்களைக் கூப்பிட்டு, நளனைத் தேடி வருமாறு அவர்களைப் பணித்தார். அந்தணர்கள் தமயந்தியிடம் சென்று— ''நாங்கள் நளனைத் தேடிக் கண்டுபிடிக்கப் போய்க் கொண்டிருக்கிறோம்'' என்றார்கள்.

தமயந்தியும் அவர்களிடம் இவ்வாறு கூறினாள்— ''நீங்கள் எந்த தேசத்திற்குச் செல்கிறீர்களோ, அங்கே கூட்டத்தில்— 'என் பிரியத்திற்குரிய வஞ்சகரே! என் ஆடையில் பாதியைக் கிழித்துக் கொண்டு, இந்த ஏழையைக் காட்டில் தூங்கிக் கொண்டிருக்கும்போது விட்டுவிட்டு, எங்கே சென்று விட்டீர்கள்? உங்களுடைய ஏழை மனைவி பாதி ஆடையை அணிந்து கொண்டு, அதே நிலைமையில் உங்கள் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறாள். உங்கள் பிரிவினால் துயரடைந்தவளாக இருக்கிறாள்' என்று கூற வேண்டும்.

அவர்கள் முன்பு என் நிலைமையை விவரமாகக் கூறுங்கள். எவ்விதம் கூறினால் அவர் மகிழ்ச்சியடைவாரோ, என் மீது கருணை காட்டுவாரோ அவ்விதம் கூறுங்கள். நான் கூறியதைக் கேட்டு யாராவது பதில் கூறினால், 'அவர் யார்? எங்கே வசிக்கிறார்?' என்ற விஷயங்களைத் தெரிந்து கொள்ளுங்கள். அவரது பதிலை நினைவில் வைத்துக் கொண்டு என்னிடம் வந்து கூறுங்கள். என் கட்டளைப்படி இந்த வார்த்தைகளைக் கூறுகிறீர்கள் என்கிற விஷயம் அவருக்குத் தெரியக் கூடாது.'' அந்தணர்கள் தமயந்தியின் கட்டளைப்படி நளனைத் தேடப் புறப்பட்டார்கள்.



காரிருளில் பாழ்மண் டபத்தேதன் காதலியைச்
சோர்துயிலின் நீத்தல் துணிவன்றோ – தேர்வேந்தற்
கென்றறைந்தால் நேர்நின் றெதிர்மாற்றம் தந்தாரைச்
சென்றறிந்து வாவென்றாள் தேர்ந்து.

(நளவெண்பா, கலிநீங்கு காண்டம் 363)

வெகுகாலம் தேடி அலைந்த பிறகு 'பர்ணாதன்' என்ற அந்தணர், விதர்ப்ப நாட்டு அரண்மனைக்கு வந்து தமயந்தியிடம் கூறினார்— "தமயந்தி! உங்கள் கட்டளைப்படி நிஷத நாட்டு மன்னன் நளனைத் தேடிக் கொண்டு, அயோத்தி போய்ச் சேர்ந்தேன். அங்கே மன்னன் ருதுபர்ணனுக்கு அருகில் சென்று, நிறைந்த சபையில் உன் வார்த்தைகளை நீ கூறியவிதமே கூறினேன். ஆனால், ஒருவரும் பதில் கூறவில்லை. நான் புறப்பட்ட சமயத்தில், அவனுடைய தேரோட்டியான பாகுகன் என்பவன் என்னைத் தனிமையில் அழைத்துச் சென்று, சில வார்த்தைகள் கூறினான். தேவி! அந்தத் தேரோட்டி ருதுபர்ணனுடைய குதிரைகளைப் பழக்குகிறான்; சுவைமிக்க உணவு தயார் செய்கிறான். ஆனால், அவன் கைகள் சிறியனவாக இருக்கின்றன; விகாரமான தோற்றம் கொண்டவனாக இருக்கிறான்.

அவன் பெருமூச்சுவிட்டு, அழுது கொண்டு இவ்வாறு கூறினான்— 'உயர்குலத்தில் உதித்த பெண்கள் மிகுந்த துன்பத்தை அடைந்தபோதிலும், கற்புநெறியைக் காப்பாற்றிக் கொள்கிறார்கள். கற்பின் பலத்தினால் வானுலகையும் வெற்றி கொள்கின்றனர். எப்பொழுதேனும் அப்பெண்களின் கணவர் கைவிட்டாலும் கோபம் கொள்வதில்லை. தங்கள் நன்னடத்தையைக் காப்பாற்றிக் கொள்கிறார்கள். மனைவியைக் கைவிடும் கணவன் பெரிய துன்பத்தில் சிக்கிக் கொண்டதால் துயரமடைந்தவனாகவும், புத்தி கலங்கிப் போனவனாகவும் இருந்தான். ஆகவே, அவனிடம் கோபம் கொள்ளக்கூடாது. தன் மனைவியை நலமாக வைத்துக் கொள்ளவில்லை என்று ஒப்புக் கொள்கிறான். ஆனால், அந்தச் சமயம் அரசை இழந்து பசியால் வாடி, முன் விதிப்பயனால் பீடிக்கப்பட்டுத் துன்பமடைந்திருந்தான். இந்த நிலைமையில் இருந்த அவன் மேல் கோபம் கொள்ளலாகாது. தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள ஒரு பிழைப்பைத் தேடியபோது, அவன் ஆடையைப் பறவை எடுத்துச் சென்றது. அவன் இதய வேதனை பொறுக்க

முடியாமலிருந்தது' என்று கூறினான். அரச குமாரியே! பாகுகனுடைய இந்த வார்த்தையைக் கேட்டு, உங்களிடம் கூற வந்துள்ளேன். உங்கள் விருப்பப்படி செய்யுங்கள். விருப்பமானால் மகாராஜாவிடமும் கூறுங்கள்.''

அந்தணர் பர்ணாதருடைய வார்த்தையைக் கேட்ட தமயந்தியின் கண்களில் நீர் நிறைந்தது. தன் அன்னையைத் தனிமையில் சந்தித்து அவளிடம்— ''தாயே! இந்த விஷயத்தைத் தந்தையிடம் கூறாதீர்! இந்தச் செயலை சுதேவர் என்ற அந்தணரிடம் ஒப்படைக்கிறேன். என்னைச் சுபமுகூர்த்தத்தில் அவர் இங்கே கொண்டு வந்து சேர்த்தது போல, நல்ல நிமித்தங்கொண்டு அவர் அயோத்தி செல்லட்டும். என் கணவர் இங்கு வருவதற்கான வழி காணட்டும்'' என்று கூறினாள்.

அந்தணர் பர்ணாதருக்கு தகுந்த மரியாதை செய்து அவருக்கு விடைகொடுத்தாள். பிறகு, சுதேவரை அழைத்தாள். அவரிடம், ''அந்தணோத்தமரே! நீங்கள் வெகுவிரைவில் அயோத்தி சென்று ருதுபர்ணராஜாவிடம், 'பீமன் மகள் தமயந்தி, மறுமுறை சுயம்வரம் மூலமாக, தான் விரும்பிய கணவரைத் தேர்ந்தெடுக்கப் போகிறாள். பெரிய பெரிய அரசர்களும் அரசகுமாரர்களும் போய்க் கொண்டிருக்கிறார்கள். சுயம்வரம் நாளையே நடப்பதாக நிர்ணயிக்கப்பட்டுள்ளது. உங்களால் அதற்குள் அங்கே போக முடியுமானால் செல்லுங்கள். நளன் உயிருடன் இருக்கிறாரா? அல்லது இறந்துவிட்டாரா? என்று தெரியவில்லை. அதனால், தமயந்தி நாளை சூரியோதய சமயத்தில் இரண்டாவது கணவரைத் தேர்ந்தெடுக்கப் போகிறாள்' என்று கூறுங்கள்'' என்றுரைத்தாள். தமயந்தி கூறியபடியே, சுதேவர் அயோத்தி சென்று ருதுபர்ணராஜாவிடம் எல்லா விஷயங்களையும் கூறினார்.

அந்தணர் சுதேவருடைய வார்த்தையைக் கேட்டு மன்னர் ருதுபர்ணன், பாகுகனை அழைத்து இனிய குரலில் அவன் புரிந்து கொள்ளும்படியாகக் கூறினார்— ''பாகுகா! நாளைக்கு



மீண்டோர் சுயம்வரத்தை வீமன் திருமடந்தை
பூண்டாளென் றந்தணநீ போயுரைத்தால் – நீண்ட
கொடைவேந்தற் கித்தூரம் தேர்க்கோலம் கொள்வான்
படைவேந்தன் என்றான் பரிந்து.

(நளவெண்பா, கலிநீங்கு காண்டம் 369)

தமயந்தியின் சுயம்வரம் நடக்கவிருக்கிறது. ஒரே நாளில் நான் விதர்ப்ப தேசம் போய்ச் சேர விரும்புகிறேன். ஆனால், இவ்வளவு விரைவில் நாம் அங்கு போய்ச் சேர்ந்துவிடலாம் என்று கருதினால், நாம் புறப்படலாம்.''

மன்னர் ருதுபர்ணனுடைய வார்த்தையைக் கேட்ட நளனுடைய இதயம் வெடிப்பது போல் ஆயிற்று. நளன், தன் மனத்திற்குள், 'துயரத்தினால் அறிவு தடுமாறிய தமயந்தி இவ்வாறு சொல்லியிருக்கலாம். ஆனால், இதை அவள் விரும்புவாளா? இருக்காது, இருக்க முடியாது. என்னை அடைவதற்காகவே, இவ்வுபாயத்தைச் செய்திருக்கலாம். அவள் கற்புக்கரசியாயிற்றே! நோன்பு கொண்டவளாயிற்றே! எளிமையானவள். தீய புத்தியின் வசப்பட்ட நான், அவளைத் துறந்தேனே! அவளிடம் கொடுமையாக நடந்து கொண்டேனே! குற்றம் என்னுடையதே! அவளால் இவ்வாறு செய்ய முடியாது. இருக்கட்டும். இதன் உண்மை அங்கு சென்றால்தானே தெரியும்? ருதுபர்ணனுடைய விருப்பத்தை நிறைவேற்றுவதில் என் சொந்த நலனும் அடங்கியிருக்கிறது' என்று நினைத்துக் கைகூப்பிக் கொண்டு— ''நீங்கள் கூறியபடியே உறுதியாகச் செய்வேன்'' என்று பாகுகன் கூறினார். குதிரை லாயத்திற்குச் சென்று மிக வேகமாக ஓடக்கூடிய நான்கு உயர் ஜாதிக் குதிரைகளைத் தேர்ந்தெடுத்துத் தேரில் பூட்டினார். பறவைகள் வானில் வெகுவேகமாகப் பறப்பதைப் போல பாகுகனுடைய தேர் ஆறு, மலை, காடு – இவற்றைத் தாண்டியது. ஓரிடத்தில் ருதுபர்ணராஜாவினுடைய மேலாடை கீழே விழுந்தது.

**மன்னர் ருதுபர்ணன்—** ''பாகுகா! தேரை நிறுத்து. வார்ஷ்ணேயனை மேலாடையை எடுத்து வரும்படி கூறுகிறேன்'' என்றார்.

**நளன்—** ''அரசே! உங்கள் ஆடை இப்பொழுதுதான் கீழே விழுந்தது. ஆனால், அங்கிருந்து ஒரு யோஜனை தூரம் வந்துவிட்டோமே! அதை இனி எடுத்து வர இயலாது''



மேலாடை வீழ்ந்த தெடுவென்றான் அவ்வளவில்
நாலாறு காதம் நடந்ததே — தோலாமை
மேல்கொண்டான் ஏறிவர வெம்மைக் கலிச்சூதில்
மால்கொண்டான் கோல்கொண்ட மா.

(நளவெண்பா, கலிநீங்கு காண்டம் 378)

என்றார். [தேரின் கடும்வேகத்தை இதன் வழி ஊகித்துக் கொள்ளலாம். அத்துணை வேகம்!!!] இங்ஙனம் உரையாடல் நடந்து கொண்டிருந்தபோது, தேர் காட்டில் வெகுவேகமாகச் சென்று கொண்டிருந்தது.

மன்னர் ருதுபர்ணன் கூறினார்— ''பாகுகா! என் கணிதத் திறமையைப் பார். முன்னால் இருக்கும் மரத்தில் எத்தனை இலைகளும் பழங்களும் தென்படுகின்றனவோ, அவற்றைவிட தரைமீது விழுந்திருக்கும் இலைகளும் பழங்களும் நூற்றியொரு மடங்கு அதிகம். இந்த மரத்தின் இரு பாகங்களிலும் கிளைகளிலும் ஐந்து கோடி இலைகள் இருக்கின்றன. இரண்டாயிரத்து தொண்ணூற்றைந்து பழங்கள் உள்ளன. விருப்பமிருந்தால் எண்ணிப் பார்.'' பாகுகன் தேரை நிறுத்தி, தான்றி மரத்தின் பழங்களையும் இலைகளையும் எண்ணிப் பார்க்கத் தொடங்கினார். அரசன் கூறிய் கணக்குப்படியே இலைகளின் எண்ணிக்கையும், பழங்களின் எண்ணிக்கையும் சரியாக இருந்தன. நளன் வியப்பில் ஆழ்ந்தார்.

பாகுகன் அரசனிடம்— ''அரசே! உங்கள் கணிதத்திறமை அற்புதமானது. அதை எனக்குக் கற்பியுங்கள்'' என்றார். அப்போது அரசன்— ''கணிதக் கலையைப் போலவே, நான் சூதாட்டக் கலையின் நுட்பங்களையும் அறிந்தவன்'' என்றார். இதைக் கேட்ட நளன்— ''நீங்கள் இந்த வித்தையை எனக்குக் கற்பித்தால், நான் உங்களுக்குக் குதிரைகள் பற்றிய வித்தையைச் சொல்லித் தருகிறேன்'' என்றார்.

ருதுபர்ணராஜாவுக்கோ, 'விதர்ப்ப தேசத்தை விரைவில் சென்றடைந்தாக வேண்டுமே' என்ற எண்ணம் ஒருபுறம். மறுபுறம் அசுவ சாஸ்திரத்தையும் கற்றுக் கொள்ளும் அவாவும் இருந்தது. ஆகவே, சூதாட்டம் பற்றிய கலையை நளனுக்கு சொல்லிக் கொடுத்து— ''அசுவ வித்தையைப் பிறகு கற்றுக் கொள்கிறேன். நீ மறவாது கற்றுத் தரவேண்டும்'' என்றார்.

நளன் சூதாட்டக் கலையைக் கற்றுக் கொண்ட அதே நேரத்தில், கார்கோடகனுடைய கடுமையான விஷத்தைக் கக்கிக் கொண்டு, நளனுடைய உடலிலிருந்து கலிபுருஷன் வெளியேறினான். கலிபுருஷனைக் கண்ட நளனுக்குக் கடுஞ்சினம் வந்தது. அவனுக்கு சாபம் கொடுக்க விரும்பினார். கலிபுருஷன் இரு கைகளையும் கூப்பிக் கொண்டு, பயந்து நடுங்கியவாறு— ''அரசே! தாங்கள் கோபத்தைத் தணித்துக் கொள்ளுங்கள். நான், தங்களைப் புகழ் வாய்ந்தவனாகச் செய்வேன். தாங்கள் தமயந்தியைத் துறந்து வெளியேறிய போது, அவள் எனக்கு சாபம் கொடுத்தாள். கார்கோடகனுடைய விஷத்தால் எரியுண்டு பெரும் துன்பத்தை அனுபவித்துக் கொண்டு, தங்கள் உடலிலேயே இருந்து வந்தேன். நான் தங்களைச் சரணடைகிறேன். என் வேண்டுகோளுக்குச் செவி சாய்க்க வேண்டும். தாங்கள் என்னைச் சபிக்கக்கூடாது. யார் தங்களது புனிதமான கதையைக் கூறுகிறார்களோ, அவருக்கு என்னால் ஒரு தீங்கும் ஏற்படாது.'' நள மன்னர் கோபத்தைத் தணித்துக் கொண்டார். கலிபுருஷன் அஞ்சியவாறு தான்றி மரம் ஒன்றினுள் நுழைந்தான். நுழைந்த மாத்திரத்தில் அந்த மரம் பட்டுப் போய்விட்டது. இந்த உரையாடல் நள மன்னர், கலிபுருஷன் – இவர்கள் இருவரைத் தவிர, வேறு யாருக்கும் தெரியாது.

இவ்வாறு கலிபுருஷன் நள மகாராஜாவை விட்டுச் சென்ற பிறகும், நளனுடைய வடிவம் மாறவில்லை. அவர் தேரை வேமாக ஓட்டினார். மாலைநேரம் நெருங்கும் தருணத்தில் அவர்கள் விதர்ப்ப தேசத்தை அடைந்தனர். பீம ராஜாவிடம் செய்தி தெரிவிக்கப்பட்டது. அவர், மன்னர் ருதுபர்ணனைத் தன் இல்லத்திற்கு அழைத்து வந்தார். ருதுபர்ணனின் தேரொலி திசைகளெல்லாம் எதிரொலித்தது. முன்பொரு சமயம் நளனுடைய குழந்தைகள் வந்த ரதத்தின் குதிரைகள் குண்டினபுரத்தில் இருந்தன. தேரின் ஒலியால் அவை நள மகாராஜனை அடையாளம் கண்டு கொண்டு மகிழ்ச்சி

அடைந்தன. தமயந்திக்கும் தேரொலி அவ்விதமே தோன்றிற்று. தமயந்தி சொன்னாள்— "இந்தத் தேரின் சப்தம், என் மனத்தில் மகிழ்ச்சியை உண்டாக்குகிறது. இந்தத் தேரை ஓட்டுபவர் என் கணவராகத்தான் இருக்க வேண்டும். இன்று அவர் என்னிடம் வந்து சேராவிட்டால், நான் எரியும் நெருப்பில் குதித்து விடுவேன். கேலியாகக்கூட நான் அவரிடம் பொய் சொன்னதில்லை; அவருக்குத் தீங்கு நினைத்ததில்லை; வாக்குறுதியை மீறியதில்லை. அவர் சக்தி வாய்ந்தவர்; பொறுமைசாலி; வீரர்; கொடையாளி; பிறன்மனை விழையாப் பேராண்மை படைத்தவர். அவர் பிரிவினால் என் இதயம் வெடித்துவிடும்போல் இருக்கிறது.". தமயந்தி, அரண்மனையின் மாடியின் மீது ஏறி, தேர் வருவது; தேரில் வருபவர், சாரதி முதலியோர் கீழே இறங்குவது ஆகியவற்றை உற்றுப் பார்க்கத் தொடங்கினாள்.



## தமயந்தி, நளனைச் சோதித்தலும் அடையாளம் காணலும்; நள– தமயந்தி சந்திப்பு; நளன் இழந்த அரசை அடைதல்

மகரிஷி பிருஹதச்வர் கூறுகிறார்— யுதிஷ்டிரனே! விதர்ப்ப தேச அரசர் பீமன், அயோத்தி அதிபதியான ருதுபர்ணனை உரிய முறையில் வரவேற்று, சிறந்த இடத்தில் தங்க ஏற்பாடு செய்தார். குண்டினபுரத்தில் சுயம்வரத்திற்கான எந்த அடையாளமும் தென்படவில்லை. தமயந்தியின் சுயம்வரத்திற்குத்தான் ருதுபர்ணன் அங்கே வந்திருக்கிறார் என்பதையும் பீமராஜா அறியவில்லை. யோக க்ஷேமங்களை விசாரித்த பிறகு பீமன் ருதுபர்ணராஜாவிடம், "தாங்கள் இங்கு வந்திருப்பதன் காரணத்தை நான் தெரிந்து கொள்ளலாமா?" என்று கேட்டார். சுயம்வரத்திற்கான எந்த ஏற்பாட்டையும் காணாத மன்னர் ருதுபர்ணன், உண்மையை மறைத்து, "தங்களுக்கு வணக்கம் தெரிவித்துக் கொள்ளவே,

இங்கு வந்துள்ளேன்'' என்று கூறினார். பீமன் யோசித்தார்— ''ஒருவர் நம்மை வணங்குவதற்கு மட்டும் பல காத தூரம் கடந்து வருவாரா? இருக்கட்டும். போகப் போக இதன் உண்மை புலப்படும்.''

பீமன் மிகவும் வற்புறுத்தி, ருதுபர்ணனைத் தன் மாளிகையில் தங்க வைத்தார். குதிரைகள் கட்டுமிடத்தில் பாகுகன், வார்ஷ்ணேயனுடன் தங்கிக் குதிரைகளைப் பராமரிப்பதில் ஈடுபட்டார். தமயந்தியும் கவலை கொண்டு இங்ஙனம் நினைத்தாள்— 'தேரின் ஓசையைக் கேட்டால், என் கணவருடைய தேரொலி போல் தோன்றுகிறது. ஆனால், அவரை எங்கும் காணவில்லையே? ஒருவேளை வார்ஷ்ணேயன், அவரிடம் தேர் வித்தையைக் கற்றுக் கொண்டிருக்கலாமோ? அதனால் தேர் அவருடையது போல் தோன்றுகிறதோ? மன்னர் ருதுபர்ணனுக்குக் கூட இந்தக் கலை தெரிந்திருக்கலாமே!'

அவள், தன் பணிப்பெண்ணை அழைத்து, ''கேசினீ! நீ போய் அந்த விகாரரூபமுடைய ஆடவன் யார்? என்று தெரிந்து கொண்டு வா. அவரே என் கணவராகக் கூட இருக்கலாம். முன்பு அந்தணர்களிடம் நான் சொன்ன விஷயங்களை அவரிடம் சொல். அவர் சொல்லும் மறுமொழியை என்னிடம் தெரிவி''† என்றாள். கேசினீ சென்று பாகுகனிடம் பேசினாள். பாகுகன், அரசன் ருதுபர்ணன் அங்கே வந்துள்ள காரணத்தைக் கூறினார். வார்ஷ்ணேயனுக்கும் தனக்கும் தெரிந்த அசுவ வித்தையைப் பற்றியும், சமையல் செய்யும் திறமையைப் பற்றியும் சுருக்கமாகக் கூறினார்.

---

† இடைச்சுரத்தில் தன்னை இடையிருளில் நீத்த
கொடைத் தொழிலான் என்றயிர்த்த கோமான் —
மடைத்தொழில்கள்
செய்கின்ற தெல்லாம் தெரிந்துணர்ந்து வாவென்றாள்
கைநின்ற நெஞ்சாள் நயந்து.

[நளவெண்பா, கலிநீங்கு காண்டம் 388]



கேசினீ அவரிடம் கேட்டாள்— "மகாராஜா நளன் எங்கு இருக்கிறார்? உனக்குத் தெரியுமா? அல்லது உன் சிநேகிதன் வார்ஷ்ணேயனுக்குத் தெரியுமா?"

பாகுகன் கூறினார்— "நளனுடைய குழந்தைகளை இங்கே விட்டு விட்டு வார்ஷ்ணேயன் சென்றுவிட்டான். அவனுக்கு நளனைப் பற்றி எதுவும் தெரியாது. தற்சமயம் நளனுடைய வடிவம் மாறியுள்ளது. அவன் மறைந்து

வாழ்கிறான். அவன் யாரென்பது அவனுக்குத்தான் தெரியும். அல்லது மனைவி தமயந்திக்குத் தெரியலாம். ஏனெனில், அவர் ரகசியமான தன் அடையாளங்களைப் பிறர் முன் வெளிப்படுத்த விரும்ப மாட்டார். கேசினீ! நளன் துன்பத்தில் சிக்கிக் கொண்டிருந்தான். ஆகையால்தான் தன் மனைவியைத் துறந்து வெளியேறினான். தமயந்தி, அவனைக் கோபிக்கக் கூடாது. தன் உணவைப் பற்றிய கவலையிலிருக்கும்போது, பறவைகள் அவன் ஆடையை எடுத்துக்கொண்டு பறந்தன. அவன் இதயம் வேதனையால் பீடிக்கப்பட்டிருந்தது. தன் மனைவியிடம் சரியான முறையில் நடக்கவில்லை என்பது உண்மையே! அவனுடைய தீவினைப் பயனை உணர்ந்து கொண்டு, தமயந்தி அவனிடம் கோபம் கொள்ளக் கூடாது.'' இதைக் கூறும்போது நளனுடைய இதயம் தளர்வுற்றது; கண்களிலிருந்து கண்ணீர் பெருகியது. அவர் அழத் தொடங்கினார்.

பின்னர், தமயந்தியிடம் வந்து கேசினீ எல்லா விஷயங்களையும் கூறி, பாகுகன் கண்ணீர்விட்டு அழுததையும் கூறினாள். உடனே, தமயந்தியின் சந்தேகம் இன்னும் வலுவடைந்தது. பாகுகன்தான் நளன் என்று நினைத்தாள். பணிப்பெண்ணிடம், ''கேசினீ! மறுபடியும் நீ பாகுகன் அருகில் சென்று, எதுவும் பேசாமல் நின்று கொண்டிரு. அவனுடைய நடவடிக்கைகளைக் கூர்ந்து கவனி. அவன் நெருப்பு கேட்டால் கொடுக்காதே; தண்ணீர் கேட்டால் வேண்டுமென்றே தாமதமாகக் கொடு. அவனுடைய ஒவ்வொரு செயலைப் பற்றியும் என்னிடம் வந்து சொல்'' என்று ஆணையிட்டாள்.

கேசினீ பாகுகனிடம் மறுபடியும் சென்றாள். அங்கு சிலசமயம் தேவர்கள் மாதிரியும், சிலசமயம் மனிதர்கள் மாதிரியும் பாகுகன் நடந்து கொண்டதைப் பார்த்த கேசினீ, திரும்பிச் சென்று தமயந்தியிடம், ''அரசகுமாரியே! பாகுகன் நீர், நிலம், நெருப்பு – இவற்றை வெற்றி

கொண்டிருக்கிறான். நான் பிறந்ததிலிருந்து இம்மாதிரி மனிதனைக் கண்டதும் இல்லை; கேட்டதும் இல்லை. உயரம் குறைவான வாயிலைக் கடக்க அவன் விரும்பினால், அவன் குனிவதில்லை; நிலைப்படிதான் உயரமாகிறது. குனியாமலேயே வாயிலைக் கடக்கிறான். சிறியதிலும் சிறியதான துவாரங்கள், அவன் விஷயத்தில் குகைகளாகி விடுகின்றன. காலியான தண்ணீர்க்குடம் அவன் பார்வைபட்ட மாத்திரத்தில் நீரால் நிறைந்துவிடுகிறது. வைக்கோலை அவன் வெய்யிலில் வைத்தால், அது பற்றி எரிகிறது. மேலும், அவன் தீயைத் தொட்டாலும், அது அவனைச் சுடுவதில்லை. அவன் விரும்பியபடி தண்ணீர் பெருகுகிறது. அவன் மலர்களைக் கைகளால் கசக்கினாலும், அவை நறுமணத்துடன் புத்தம் புதியதாய்த் திகழ்கின்றன. இந்த அற்புதங்களைக் கண்ட நான் ஆச்சரியப்பட்டு, உங்களிடம் விரைந்தோடி வந்தேன்'' என்றுரைத்தாள்.

பாகுகனுடைய இந்த இலட்சணங்களைக் கேட்ட தமயந்தி பாகுகன்தான் 'தன் பதியான நளன்.' என்று தீர்மானத்திற்கு வந்தாள். கேசினியுடன் தன் குழந்தைகளை நளன் அருகில் அனுப்பினாள். பாகுகன் இந்திரசேனனையும் இந்திரசேனையையும் அடையாளம் கண்டு கொண்டு, அவர்களை நெருங்கி வந்து இருவரையும் மார்போடு அணைத்துக் கொண்டு, தன் மடியில் அமர்த்திக் கொண்டார். தன் குழந்தைகளைச் சந்தித்த பாகுகன், மனம் கலங்கிப் போய் கண்ணீர் விடத் தொடங்கினார். அவர் முகத்தில் தந்தையுடைய வாத்சல்யம் வெளிப்பட்டது. பிறகு, இரு குழந்தைகளையும் கேசினியிடத்தில் ஒப்படைத்துவிட்டு, ''கேசினீ! இவ்விரு குழந்தைகளும் என் குழந்தைகளைப் போலவே இருப்பதால், எனக்கு அழுகை வந்துவிட்டது. நீ திரும்பத் திரும்ப என் சமீபம் வருகிறாய். மக்கள் என்ன நினைப்பார்களோ? இங்கு நீ அடிக்கடி வருவது நல்லதல்ல'' என்று கூறினார். கேசினீ நடந்த செய்தி முழுவதையும் தமயந்தியிடம் கூறினாள்.



மக்களைமுன் காணா மனநடுங்கா வெய்துயிராப்
புக்கெடுத்து வீரப் புயந்தணையா – மக்காள்நீர்
என்மக்கள் போல்கின்றீர் யார்மக்க ளென்றுரைத்தான்
வன்மக் களியானை மன்.

(நளவெண்பா, கலிநீங்கு காண்டம் 390)

பிறகு கேசினியைத் தன் தாயாரிடம் அனுப்பி, அவள் வாய்மொழியாகத் தன் கருத்தைத் தமயந்தி தெரிவித்தாள்— ''தாயே! பாகுகன்தான் நளன் என்று கருதி, அவனைத் திரும்பத் திரும்பச் சோதனை செய்து பார்த்தேன். அவன் தோற்றத்தைப் பற்றிய சந்தேகம்தான் இன்னும் தெளிவாகாமல் இருக்கிறது. இப்போது, அவனை நானே பரீட்சை செய்ய விரும்புகிறேன். ஆகையால், பாகுகனை என் அந்தப்புரத்திற்கு வரக் கட்டளையிடுங்கள்; அல்லது, என்னை அவன் சமீபம் போக அனுமதியுங்கள். நீங்கள் விரும்பினால் தந்தையிடம் இவ்விஷயத்தைக் கூறுங்கள். இல்லையெனில் கூற வேண்டாம்.''

ராணி தன் கணவரிடம் சொல்லி, பாகுகன் அந்தப்புரம் வருவதற்கு அனுமதி பெற்றாள். அந்தப்புரத்திற்கு வருமாறு பாகுகன் பணிக்கப்பட்டான். தமயந்தியைக் கண்டதுமே நளனுக்கு துக்கமும் சோகமும் ஒன்றுசேர்ந்து மனத்தைக் கவ்விக் கொண்டன. கண்ணீர் மழையில் நனைந்தார். பாகுகனுடைய பரபரப்பையும் சங்கடத்தையும் கண்ட தமயந்தி சோகமயமானாள். அந்தச் சமயத்தில் தமயந்தி காவிநிற ஆடையை அணிந்திருந்தாள். தலையில் ஜடை தரித்திருந்தாள். சரீரம் அழுக்கடைந்திருந்தது.

தமயந்தி கேட்டாள்— ''பாகுகனே! முன்பொரு சமயம் தர்மமறிந்த ஓர் ஆடவன், தன் மனைவியை அவள் தூங்கிக் கொண்டிருந்த சமயம் காட்டில் தனியாக விட்டுவிட்டுச் சென்றுவிட்டார். நீ எங்கேயாவது அவரைப் பார்த்திருக்கிறாயா? அந்தச் சமயத்தில் அவள் களைப்புடன் இருந்தாள்; உறக்கத்தில் ஆழ்ந்திருந்தாள். குற்றமற்ற அந்தப் பெண்ணை 'புண்யச்லோகன்' ஆகிய நிஷத நாட்டு மன்னனைத் தவிர, வேறு எந்த ஆடவனால் மனித சஞ்சாரமற்ற காட்டில் தனியே விட்டுவிட்டுச் செல்ல முடியும்? அவள் அவருக்கு ஒரு தீங்கும் இழைக்கவில்லை. அப்படி இருந்தும் உறங்கிக் கொண்டிருந்த அவளைக் காட்டில் தனியாக விட்டுவிட்டுச் சென்றுவிட்டார்.''



இதனைச் சொல்லிக் கொண்டிருக்கும்போதே, தமயந்தியின் கண்களில் கண்ணீர் பெருகியது. தமயந்தியினுடைய அகன்ற சிவந்த கண்களிலிருந்து கண்ணீர் கீழே சிந்துவதைக் கண்டு நளனின் துக்கம் தாளவில்லை. நளன்— ''பிரியமானவளே! வேண்டுமென்றே அறிந்து, நான் அரசை இழக்கவுமில்லை; உன்னை விட்டுப் பிரியவுமில்லை. இது கலிபுருஷனுடைய

கொடுமையான செயல். என்னைப் பிரிந்த நேரத்திலிருந்து, இரவும் பகலும் என் நினைவாகவே இருப்பாய் என்பது எனக்குத் தெரியும். என் சரீரத்தில் வசித்து வந்த கலிபுருஷன், உன் சாபத்தின் காரணமாக, தாபத்தினால் தவித்துக் கொண்டிருந்தான். என் முயற்சியினாலும் தவத்தினாலும் அவனை வெற்றி கொண்டேன். இப்போது நம்முடைய துக்கத்திற்கு முடிவு ஏற்பட்டுவிட்டது. கலிபுருஷன், என்னை விட்டுச் சென்று விட்டான். நான் உனக்காகவே இங்கு வந்துள்ளேன். என் போன்ற அன்பும் பரிவும் கொண்ட கணவனைத் துறந்து, இரண்டாவது முறையாக வேறு ஓர் ஆடவனை மணம் செய்துகொள்ள எப்படித் துணிந்தாய்? வேறொரு பெண்ணால் இவ்வாறு செய்ய முடியுமா? உன்னுடைய சுயம்வரச் செய்தியைக் கேட்டுத்தான் ருதுபர்ண ராஜா, இவ்வளவு விரைவாக இங்கு வந்துள்ளார்'' என்று கூறினார்.

கைகளைக் குவித்தவண்ணம் தமயந்தி கூறினாள்— ''பண்பாளரே! என்மீது குற்றம் சுமத்துவது சரியில்லை. உங்கள் முன் தோன்றிய தேவர்களை விட்டு விட்டு உங்களையே கணவராக வரித்தேன். உங்களைத் தேடிக் கண்டுபிடிக்கும்படி பல அந்தணர்களை அனுப்பினேன். நான் கூறிய வார்த்தைகளைப் பலமுறை கூறிக் கொண்டு, அவர்கள் நான்கு திசைகளிலும் சுற்றினார்கள். பர்ணாதர் என்ற அந்தணர் அயோத்தியை அடைந்து, உங்களைக் கண்டார். நான் கூறிய வார்த்தைகளை உங்களிடம் கூறினார். நீங்களும் பொருத்தமாகப் பதிலுரைத்தீர்கள். இந்தச் செய்தியைக் கேட்ட நான், உங்களை வரவழைக்கவே, இந்த உபாயத்தைச் செய்தேன். குதிரை பூட்டிய தேர் மூலமாக, ஒரே நாளில் நூறு யோஜனை தூரம் கடந்து வருவதற்கு, உங்களைத் தவிர வேறு யாராலும் முடியாது என்பது எனக்குத் தெரியும். உங்கள் திருவடிகளின் மேல் ஆணையாகச் சொல்கிறேன். நான் ஒருபோதும் மனத்தால்கூட வேறு ஆடவனை நினைத்ததில்லை. நான்

மனத்தினாலாவது பாவத்தைச் செய்திருந்தால் பூமிமீது சஞ்சரிக்கும் வாயுதேவன், சூரிய பகவான், மனத்திற்கு அதிதேவதையான சந்திரன் – இவர்கள் என் உயிரைக் கொண்டு போகட்டும். இம்மூன்று தேவர்களும் பூமண்டலம் முழுவதும் சுற்றுகிறார்கள். அவர்கள் உண்மையைக் கூறட்டும். நான் பாவம் செய்திருந்தால், என்னைத் தியாகம் செய்யட்டும்'' என்றாள்.

அச்சமயம் வாயுதேவன் வானில் தோன்றி, ''அரசனே! நான் உண்மையைக் கூறுகிறேன். தமயந்தி, எந்தப் பாவத்தையும் செய்யவில்லை. மூன்று ஆண்டு காலமாகத் தன் கற்புநெறியைக் காப்பாற்றி வந்திருக்கிறாள். நாங்கள் இவளுடைய பாதுகாவலர்களாக இருந்திருக்கிறோம். இவளுடைய புனிதத் தன்மைக்குச் சாட்சியாக இருக்கிறோம். உன்னைத் தேடுவதற்காகத்தான் 'சுயம்வரம்' என்று அறிவிக்கப்பட்டது. உண்மையில், தமயந்தி உனக்கே ஏற்றவள்; நீயும் தமயந்திக்கு ஏற்றவன். எந்தச் சந்தேகமும் வேண்டாம். இவளை ஏற்றுக் கொள்'' என்றார். வாயுதேவன் இப்படிக் கூறும்போது வானிலிருந்து பூமாரி பொழிந்தது. தேவதைகள் துந்துபி முழக்கினார்கள். நறுமணத்தோடு குளிர்ந்த காற்று வீசியது. இந்த வியத்தகு காட்சியைக் கண்ட நளன், தன் ஐயத்தை நீக்கி, கார்கோடகன் கொடுத்த ஆடையை அணிந்து கொண்டு, அவனை மனத்தால் நினைத்தார். அவர் சரீரம் முன்பு இருந்ததைப் போலாகியது. நளனைப் பழைய வடிவத்தில் பார்த்த தமயந்தி, அவரை ஆரத்தழுவி அழத் தொடங்கினாள். நளனும் தமயந்தியை அன்புடன் தழுவிக் கொண்டார். இரு குழந்தைகளையும் அணைத்துக் கொண்டு, அவர்களுடன் அன்பாகப் பேசினார். நளன், தமயந்தியுடன் பேசிப் பேசியே இரவைக் கழித்தார்.

பொழுது விடிந்ததும் குளித்துவிட்டு, அழகான ஆடைகளை அணிந்து கொண்டு தமயந்தியும், மாமன்னர் நளனும் பீமனருகில் சென்று, அவர் பாதங்களில் விழுந்து

வணங்கினார்கள். மிகுந்த மகிழ்ச்சியோடு அவர் அவர்களை உபசரித்தார். அவர்களுக்கு ஆறுதல் கூறித் தேற்றினார். இந்தச் செய்தி விரைவில் எங்கும் பரவியது. நகரத்து ஆண்களும் பெண்களும் மகிழ்ச்சி பொங்க, இந்த நிகழ்ச்சியை விழாவாகக் கொண்டாடினார்கள். தேவர்களுக்குப் பூஜை நடந்தது. பாகுகன் வடிவத்தில் தன்னிடம் சேவகம் செய்தவர் நளன் என்றும், அவர் தன் மனைவியோடு ஒன்றுசேர்ந்து



விட்டார் என்பதும், ருதுபர்ண ராஜாவுக்குத் தெரிந்ததும் அவர் மிகவும் மகிழ்ச்சி அடைந்தார். நளனை அழைத்து அவரிடம் மன்னிப்பை வேண்டினார். ருதுபர்ணனுடைய மிக உயர்ந்த குணத்தை நளன் வெகுவாகப் புகழ்ந்து பேசினார். அவரை உபசரித்தார். ருதுபர்ணனுக்கு குதிரையேற்றம் கற்றுக் கொடுத்தார். வேறொரு தேரோட்டியை அமர்த்திக் கொண்டு ருதுபர்ணன், தன் நகரத்திற்குத் திரும்பிச் சென்றார்.

மாமன்னர் நளன் ஒருமாதம் வரை குண்டினபுரத்திலேயே தங்கியிருந்தார். தன் மாமனாரின் கட்டளையின் பேரில், சிலருடன் நிஷத நாட்டிற்குப் புறப்பட்டார். பீமராஜா ஒரு வெள்ளை நிறத்தேர், பதினாறு யானைகள், ஐம்பது குதிரைகள், அறுநூறு காலாட்படையினரை நளனுடன் அனுப்பி வைத்தார். நளன் தன் நகரத்திற்குள் பிரவேசித்து, புஷ்கரனைச் சந்தித்து— ''கபடம் நிறைந்த சூதாட்டத்தைத் திரும்ப ஆடு; அல்லது வில்லில் நாணேற்று'' என்று கூறினார். புஷ்கரன் சிரித்துவிட்டு, ''நல்லது, பந்தயம் வைப்பதற்கு உனக்குப் பணம் கிடைத்துவிட்டது. வா, இந்தத் தடவை உன் செல்வம், தமயந்தி இரண்டையும் வெற்றி கொள்வேன்'' என்றான்.

நளன், ''சகோதரனே! சூதாட்டம் நடக்கட்டும். ஏன் பிதற்றுகிறாய்? தோற்றாயானால் உன் நிலைமை என்ன ஆகும் தெரியுமா?'' என்றார்.

சூதாட்டம் தொடங்கியது. முதல் பந்தயத்திலேயே புஷ்கரனிடமிருந்து அரசு, இரத்தினங்களின் குவியல், அவன் உயிரையும்கூட வென்று விட்டார், நளன். அவர் புஷ்கரனிடம் கூறினார்— ''எல்லா ராஜ்யமும் என்னுடையதாகி விட்டது. இப்போது நீ, தமயந்தியைக் கண்ணெடுத்தும் பார்க்க முடியாது. நீ, தமயந்தியின் பணியாளன். மூடனே! முதல் தடவை கூட, நீ என்னை வெல்லவில்லை. அந்தச் செயல்

கலிபுருஷன் செய்த தீவினை. உனக்கு இந்த விவரம் தெரியாது. கலிபுருஷனின் இந்தக் குற்றத்தை, உன் மேல் சுமத்த நான் விரும்பவில்லை. நீ, உன் வாழ்க்கையைச் சுகமாகக் கழிப்பாயாக. உன்னை நான் விட்டு விடுகிறேன். உன் மீது என் அன்பு முன்பு இருந்ததுபோலவே இருக்கும். நீ, என் உடன்பிறந்தவன். நான், உன்னிடம் ஒருபோதும் பகைமை பாராட்ட மாட்டேன். நீ நூறாண்டு வாழ்வாய்.'' மாமன்னர் நளன், இவ்வாறு புஷ்கரனுக்குத் தைரியமளித்து தழுவிக் கொண்டு விடை கொடுத்தார்.

கைகூப்பி நளனுக்கு வணக்கம் தெரிவித்த புஷ்கரன் கூறினான்— ''இவ்வுலகில் உங்கள் புகழ் அழியாமல் இருக்கட்டும். நீங்கள் பத்தாயிரம் ஆண்டுகள் சுகமாக வாழ்க! நீங்கள் எனக்கு உணவளித்தவர்; என் உயிரைக் காப்பாற்றியவர்.'' நளனுடைய உபசரிப்பைப் பெற்றுக் கொண்டு, புஷ்கரன் ஒரு மாதம் வரை நளனுடைய நகரத்திலேயே வசித்தான். பிறகு, புஷ்கரன் தன் படையுடனும் சேவகர்களுடனும் குடும்பத்துடனும் தன் தலைநகருக்குத் திரும்பினான். மகாராஜா நளன், புஷ்கரனை அவனது நாட்டிற்கு அனுப்பிவிட்டு, தன் தலைநகருக்குத் திரும்பினார். நகர மாந்தரும், சாதாரணக் குடிமக்களும், ஏனைய அவையோரும் நளனைத் திரும்பப் பெற்று, மேனி சிலிர்க்க மகிழ்வுற்றனர். கைகளைக் குவித்துக் கொண்டு அவர்கள், நளனிடம்— ''அரசர்களில் சிறந்தவரே! துன்பத்திலிருந்து விடுதலை பெற்று இன்று நாங்கள் சுகமாக இருக்கிறோம். இந்திரனுக்கு தேவர்கள் பணி புரிவதுபோல், தங்களுக்கு பணிபுரியவே இங்கு குழுமியுள்ளோம்'' என்று தெரிவித்துக் கொண்டார்கள்.

ஒவ்வொரு வீடும் மகிழ்ச்சியுடன் விழாக்கோலம் பூண்டது. நான்கு திசைகளிலும் அமைதி பரவியது. அரச முறைப்படி படையை அனுப்பி நளன், தமயந்தியை அழைத்து வரச் செய்தார். ராஜா பீமன், தன் புதல்வியை நிறைய பரிசுகளை



அந்த வளநாடும் அவ்வரசும் ஆங்கொழிய
வந்த படியே வழிக்கொண்டான் – செந்தமிழோர்
நாவேய்ந்த சொல்லான் நளனென்று போற்றிசைக்கும்
தேர்வேந்தற் கெல்லாம் கொடுத்து.

(நளவெண்பா, கலிநீங்கு காண்டம் 423)

நல்கி, அவளைக் கணவன் வீட்டிற்கு வழியனுப்பினார். தன் இரு குழந்தைகளையும் அழைத்துக் கொண்டு, தமயந்தி அரண்மனைக்கு வந்தாள். ராஜா நளன் மகிழ்ச்சியாகத் தன் நாட்களைக் கழித்தார். நளனுடைய புகழ் உலகெங்கும் பரவியது. அவர் அறநெறியில் ஆட்சி நடத்தினார். பெரிய பெரிய வேள்விகள் செய்து பகவானுக்கு ஆராதனை செய்தார்.

**மகரிஷி பிருஹதச்வர் கூறுகிறார்—** ''யுதிஷ்டிரனே! இன்னும் சில நாட்களில் நீயும் உன் அரசைத் திரும்பப் பெறுவாய். உன் உறவினர்களுடன் ஒன்றுசேர்வாய். நள மகாராஜா சூதாட்டம் ஆடி மிகப்பெரிய துன்பத்தை ஏற்றார். தன்னந்தனியாகவே அவர் பல துன்பங்களை அனுபவிக்க வேண்டி வந்தது. ஆனால் உனக்கோ, உன் உடன்பிறந்தவர்கள் உன்னுடன் கூடவே இருக்கிறார்கள்; திரௌபதி இருக்கிறாள்; பேரறிஞர்களும், நன்னடத்தையுள்ள அந்தணர்களும் உடன் இருக்கிறார்கள். இந்த நிலையில் நீ வருந்தத் தேவையில்லை. வாழ்க்கையின் நிலைமை எப்போதும் ஒரே மாதிரி இருப்பதில்லை. இதை யோசித்துப் பார்த்து வாழ்க்கையில் வெற்றி–தோல்வி பற்றிக் கவலைப் படாமல் இருக்கவேண்டும். நாகராஜனான கார்கோடகன், தமயந்தி, நளன், ருதுபர்ணன் ஆகியோரது கதையைக் கேட்பதாலும் சொல்வதாலும் கலிகாலத்தின் கொடுமையால் ஏற்படும் பாவங்கள் அழியும்; துன்பமடைந்த மாந்தர்களுக்கு தைரியம் ஏற்படும்.''





|| *ஸ்ரீஹரி:* ||

# நன்மொழிகள்

1. உயர்குணம் படைத்த பெண்ணும், உயர்குணம் படைத்த ஆணும் சேர்ந்தால் உயர்நிலை உண்டாகும்.
2. துன்புற்ற மனிதனுக்கு அவன் மனைவியைவிட உயர்ந்த நண்பனோ, மருந்தோ வேறு கிடையாது.
3. மனிதர்களின் மரணம் அகாலத்தில் உண்டாகாது.
4. ஒருபுறம் நான்கு வேதங்கள், அதன் அங்கங்கள் மற்றும் உப அங்கங்களோடு அத்யயனம் செய்வது, மறுபுறம் உண்மை பேசுவது – இவையிரண்டிலும் 'சத்தியமே' உயர்ந்து நிற்கும்.
5. நாம் விரும்பினாலும் உரிய தருணமின்றி மரணம் வராது.
6. இவ்வுலகத்தில் மனிதர்களுக்கு இன்பமும் துன்பமும் தெய்வத்தினாலல்லாது தானாக உண்டாவதில்லை.
7. கணவனே காரிகைக்கு அணிகலன். இதுவே மற்ற அணிகலன்களைவிடச் சிறந்த அணியாகும்.
8. எல்லோரும் எல்லாமறிவதில்லை. எல்லாமறிந்தவர் உலகில் ஒருவருமில்லை. ஒரே மனிதரிடம் அனைத்து ஞானங்களும் ஒன்று சேர்ந்திருப்பதில்லை.
9. உயர்குலத்துப் பெண்கள் மிகப்பெரிய துன்பங்களிலும் தம்மைத் தாமே காத்துக் கொள்வர். இவர்கள் சுவர்க்கம், சத்தியம் இரண்டையும் வென்று விடுகின்றனர் என்பதில் சற்றும் ஐயமில்லை.
10. உயர்ந்த குணமுள்ள பெண்கள், கணவனால் கைவிடப்பட்ட போதிலும் ஒருபோதும் கோபம் அடைவதில்லை. அவர்கள் எப்பொழுதும் நன்னடத்தை என்ற கவசத்தால் தம்மைக் காத்துக் கொள்கின்றனர்.
11. புருஷார்த்தங்கள் என்ற நாற்பெரும் பேறுகளும் எப்பொழுதும் நிலையற்றதும் அழியக்கூடியதும் ஆகும். இதையறிந்து, அவை கிடைத்தாலும் அழிந்தாலும் நாம் கவலை கொள்ளக்கூடாது.
12. விதியும் எதிரியாகி, புருஷார்த்தங்கள் பயனற்றுப் போன நிலையிலும் சத்துவ குணமுள்ள மனிதன் மனத்தில் வருத்தம் கொள்ள மாட்டான்.



॥ ஸ்ரீஹரி: ॥

# கீதா பிரஸ்ஸின் வெளியீடுகள்

## பாராயண நூல்கள்

| Code No. | | |
|---|---|---|
| 1. | 743 | ஸ்ரீமத் பகவத்கீதா மூலம் [சம்ஸ்கிருதம் – தமிழ்] |
| 2. | 793 | ஸ்ரீமத் பகவத்கீதா [தமிழ் மூலம்] & விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் [தமிழ் மூலம்] |
| 3. | 795 | ஸ்ரீமத் பகவத்கீதா – பொழிப்புரை |
| 4. | 1918 | ஸ்ரீமத் பகவத்கீதை [மூலம் – பொழிப்புரை] [கையடக்கப் பிரதி] |
| 5. | 389 | கீதா மாதுர்யம் [ஸ்ரீமத் பகவத்கீதா – வினா-விடை] |
| 6. | 823 | ஸ்ரீமத் பகவத்கீதா [மூலம் [சம்ஸ்கிருதம் – தமிழ்] – பதவுரை – பொழிப்புரை] |
| 7. | 800 | ஸ்ரீமத் பகவத்கீதா – தத்துவவிவேசனீ [மூலம் [சம்ஸ்கிருதம் – தமிழ்] – பதவுரை – பொழிப்புரை – விளக்கவுரை] |
| 8. | 1426 | ஸ்ரீமத் பகவத்கீதா – ஸாதக ஸஞ்ஜீவனீ [மூலம் [சம்ஸ்கிருதம் – தமிழ்] – பதவுரை – விளக்கவுரை] [1 முதல் 9 அத்தியாயங்கள்] |
| 9. | 1427 | [10 முதல் 18 அத்தியாயங்கள்] |
| 10. | 600 | ஸ்ரீஹநுமாங் சாலீஸா [கையடக்கப் பிரதி] [தமிழ் மூலம் – மொழிபெயர்ப்பு] |
| 11. | அச்சில் | ஸ்ரீஹநுமாங் சாலீஸா (Small Size) |
| 12. | 794 | விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் [தமிழ் மூலம்] |
| 13. | 1256 | அத்யாத்ம ராமாயணம் [தமிழ் மொழிபெயர்ப்பு] |
| 14. | 1606 | ஸ்ரீமந் நாராயணீயம் [தமிழ் மூலம் – விளக்கவுரை] |
| 15. | 1904 | சுந்தர காண்டம் [ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்] [தமிழ் மூலம் – மொழிபெயர்ப்பு] |
| 16. | 1618 | சுந்தர காண்டம் [ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்] – பொழிப்புரை |
| 17. | 1890 | கம்ப ராமாயணம் – சுந்தர காண்டம் [பாடல்கள்] |
| 18. | 1788 | ஸ்ரீ முருகன் துதிமாலை [தோத்திரத் தொகுப்பு] |
| 19. | 1789 | திருப்பாவை விளக்கம் |
| 20. | 1912 | பூஜை முறைகள் [ஸ்ரீவிநாயகர், ஸ்ரீமஹாலக்ஷ்மி, ஸ்ரீசரஸ்வதி] |

21. — தெய்வ ஸ்துதி மஞ்சரி [அச்சில்]
[ஸ்தோத்திரத் தொகுப்பு]
22. — தெய்வ ஸ்துதி மாலை [அச்சில்]
[தமிழ் தோத்திரத் தொகுப்பு]

## ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்

[ தமிழ் மூலம் – மொழிபெயர்ப்பு ]

23. 1902 முதல் பாகம் [பால–அயோத்தியா காண்டம்]
24. 1903 இரண்டாவது பாகம் [ஆரண்ய–கிஷ்கிந்தா ]
25. 1904 மூன்றாவது பாகம் [சுந்தர காண்டம்]
26. 1905 நான்காவது பாகம் [யுத்த காண்டம்]
27. 1906 ஐந்தாவது பாகம் [உத்தர காண்டம்]

## ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்

[ தமிழ் மொழிபெயர்ப்பு ]

28. 1961 முதல் பாகம் [பால–கிஷ்கிந்தா காண்டம்]
29. 1962 இரண்டாவது பாகம் [சுந்தர–உத்தர காண்டம்]

## ஸ்ரீமத் பாகவத மகாபுராணம்

[ தமிழ் மூலம் – மொழிபெயர்ப்பு ]

30. 1966 முதல் பாகம் [1 முதல் 4வது ஸ்கந்தம் வரை]
31. 1967 2வது பாகம் [5 முதல் 9வது ஸ்கந்தம் வரை]
32. 1968 3வது பாகம் [10 முதல் 12வது ஸ்கந்தம் வரை]

## அறிவுரை நல்கும் நூல்கள்

33. 127 பயனுள்ள கதைகள்
34. 365 பசுப் பராமரிப்பின் நற்பயன்கள் – கதைகள்
35. 423 கர்ம ரஹஸ்யம்
36. 466 சத்ஸங்கத்தின் சாரமான தத்துவங்கள்
37. 499 நாரத பக்தி ஸூத்ரம்
38. 536 கீதை கற்பதன் பயன்கள்
39. 550 திருநாம ஜபத்தின் மகிமை
40. 551 தூய்மையான உணவுப் பழக்கம்
41. 553 குடும்பத்தில் எப்படி இருக்க வேண்டும்?
42. 568 சரணாகதி
43. 569 உருவ வழிபாடு

| | | |
|---|---|---|
| 44. | 591 | பிள்ளைகளின் கடமைகள் |
| 45. | 601 | பகவான் ஸ்ரீகிருஷ்ணன் |
| 46. | 606 | மிக உயர்ந்த நிலையை அடைவதற்கான வழி |
| 47. | 607 | எல்லோருக்கும் மேன்மை எப்படி ஏற்படும்? |
| 48. | 608 | பக்தராஜ ஹனுமான் |
| 49. | 609 | ஸாவித்ரி–ஸத்யவான் [கதைப் பகுதி] |
| 50. | 642 | ஸ்ரீகிருஷ்ணனின் நண்பரான உத்தவரின் கதை |
| 51. | 643 | பகவான் உறையும் ஐந்து இடங்கள் |
| 52. | 644 | சுசீலா – ஓர் லக்ஷ்யப் பெண்மணி |
| 53. | 646 | பல்சுவைக் கதைகள் |
| 54. | 655 | ஒன்றே செய்மின்! நன்றே செய்வீர்!! |
| 55. | 741 | மஹாத்மா விதுரர் |
| 56. | 850 | மஹான்களுடைய அமுத மொழிகள் |
| 57. | 952 | மஹான்களின் மணிமொழிகள் |
| 58. | 953 | மஹான்களின் சீரிய உபதேசம் |
| 59. | 1110 | ஆயிரம் அமுதத் துளிகள் |
| 60. | 1134 | கீதையின் பெருமையை விளக்கும் கதைகள் |
| 61. | 1243 | உண்மையான சுகம் |
| 62. | 1246 | பக்த சரித்திரம் |
| 63. | 1289 | சாதனை நெறி |
| 64. | 1353 | ராமாயணத்தில் சில முக்கிய பாத்திரங்கள் |
| 65. | 1354 | மஹாபாரதத்தில் சில முக்கிய பாத்திரங்கள் |
| 66. | 1480 | செயல்கள் அனைத்தும் பகவானுக்கே |
| 67. | 1481 | பகவானை நேரில் காண்பதற்கான வழி |
| 68. | 1482 | பக்தியோகத்தின் பெருமை |

எங்களது நிறுவனம் ஆன்மீகம் மற்றும் மானிட நல்லொழுக்கம் வளர உதவும் நூல்களை, அனைத்து இந்திய மொழிகளிலும் பல ஆண்டுகளாக வெளியிடுகிறோம் என்பதை மிக்கப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

## எங்களது தமிழ்நாடு கிளை :

கீதா பிரஸ் புத்தக நிலையம், கீதா பிரஸ் மேன்ஷன்,
**8/1 M**, ரேஸ் கோர்ஸ் சாலை,
(தாமஸ் பார்க் பஸ்–ஸ்டாப் அருகில்), கோவை – **641 018**

# Some of Our English Publications

1318 **Śrī Rāmacaritamānasa** (With Hindi Text, Transliteration & English Translation)

1617 **Śrī Rāmacaritamānasa** A Romanized Edition with English Translation

452, 453 **Śrīmad Vālmīki Rāmāyaṇa** (With Sanskrit Text and English Translation) Set of 2 volumes

564, 565 **Śrīmad Bhāgavata** (With Sanskrit Text and English Translation) Set

1080, 1081 **Śrīmad Bhagavadgītā Sādhaka-Sañjīvanī** (By Swami Ramsukhdas) (English Commentary) Set of 2 volumes

457 **Śrīmad Bhagavadgītā Tattva-Vivecanī** (By Jayadayal Goyandka) Detailed Commentary

455 **Bhagavadgītā** (With Sanskrit Text and English Translation) Pocket size

534 ,, ,, (Bound)

456 **Śrī Rāmacaritamānasa** (With Hindi Text and English Translation)

786 ,, ,, Medium

1550 **Sundara Kāṇḍa (Roman)**

1528 **Hanumāna Cālīsā** (Roman) (Pocket Size)

1491 **Mohana** (Story with the Picture )

1492 **Rāma Lalā** ( ,, ,, ,, )

## By Jayadayal Goyandka

477 **Gems of Truth** [ Vol. I]

478 ,, [ Vol. II ]

480 **Instructive Eleven Stories**

1285 **Moral Stories**

1284 **Some Ideal Characters of Rāmāyaṇa**

1245 **Some Exemplary Characters of the Mahābhārata**

1125 **Five Divine Abodes**

520 **Secret of Jñānayoga**

521 ,, ,, **Premayoga**

522 ,, ,, **Karmayoga**

523 ,, ,, **Bhaktiyoga**

1501 **Real Love**

## By Hanuman Prasad Poddar

484 **Look Beyond the Veil**

622 **How to Attain Eternal Happiness?**

485 **Path to Divinity**

620 **The Divine Name and Its Practice**

## By Swami Ramsukhdas

1470 **For Salvation of Mankind**

619 **Ease in God-realization**

487 **Gītā Mādhurya**

472 **How to Lead A Household Life**

634 **God is Everything**

552 **Way to Attain the Supreme Bliss**

## SPECIAL EDITIONS

1411 **Gītā Roman** (Sanskrit text, Transliteration & English Translation) Book Size

1584 ,, (Pocket Size)

1407 **The Drops of Nectar** (By Swami Ramsukhdas)

1406 **Gītā Mādhurya** (By Swami Ramsukhdas)

1438 **Discovery of Truth and Immortality** (By Swami Ramsukhdas)

1413 **All is God** (By Swami Ramsukhdas)

1414 **The Story of Mīrā Bāī** (Bankey Behari)

website: **www.gitapress.org** e-mail: **booksales@gitapress.org**